

மைசூர் மகாராஜா
ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையார் பகதூர் அவர்கள்.

92-ம் பக்கம் பார்க்க.

உ
ஓம்
பரப்பிரஹ்மணேநமஃ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | பிரபவஹு ஆவணிமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 13 | 1927ஹு ஆகஸ்டுமீ 17உ | 2 |

## கடவுள் வணக்கம்.

பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
பேசாது துறவா கியே
பேசாத பெரியோர்க ணிருவிகற் பத்திஞற்
பேசார்கள் பரமகுரு வாய்ப்
போதிக்கு மூக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறி விலே
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவ ரையனே
சாதித்த சாதனமு மியோகியர்க ணமதென்று
சங்கிப்ப ராத லாலே
தன்னிலே தாஞ யயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடி னங்ஙனே
சோதிக்க மனமாயை தனையேவி ஞலடிமை
சுகமாவ தெப்படி சொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுக வாரியே. (1)

---

கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்
வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன் மதியின்மை தீர்ப்பாய்
ஒருத்தரா ருளப்பா டுணர்பவர் யாவ
ருலகவர் பன்னெறி யெனக்குப்
பொருத்தமோ சொல்லாய் மௌனசற் குருவே
போற்றிநின் பொன்னடிப் போதே. (2)

---

ஆரறிவா ரென்ன வனந்தமறை யோலமிடும்
பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. "பேதப்பட்ட சமயங்களோ ஒன்று சொன்னபடி யொன்று சொல்லாமல் விகற்பப்பட்டிருப்பனவாம்; ஆகையால், பல பேதங்களைப் பேச அறியாத பெரியோர்கள் துறவடைந்து விகற்பமற்ற தன்மையால் சமாதி யனுபவத்தில் மௌனமுற்றிருப்பார்கள்; ஞானம் போதித்தற்குரிய முக்கணெம்பெருமானாகிய நீ மேலான ஞானாசிரியனாய்வந்து செவ்வையாக அவர் அறிவைக் கைக்கொண்டு, அதனிடத்தே அந்த ஞானத்தைச் சின்முத்திரையாக அறிவித்தல் உரியதாயிற்று. கடவுளே! அங்ஙனமின்றிப் போதலும் வருதலுமில்லாமல் (இறப்பும் பிறப்பு மில்லாதிருக்க) நீங்காத ஆனந்த முண்டாக இதனை வாக்கினாலே போதிப்பாரெவர்? (எவருமிலர்); ஆதலின், மேற்கூறிய யோகநிலையிற் பழகலாமென்றாலோ அப்படி அப்பியாசித்த அப்பியாசத்தையும் யோகிகள் தம்முடையதென்று மதித்து, நான் அதனை அறியாதவனென்றிகழ்வர்; தன்னில் தானாய் அயர்ந்து அடங்கலாமென்று தனித்திருந்தாலோ, அவ்விடத்திலே என்னைச் சோதிக்க மனத்தின்கண் மாயையை ஏவுகின்றனை; இங்ஙனம் ஏவினால் அடிமை ஆனந்தரூபமாவதெப்படி?" என்பது இதன் கருத்து. "சமயவிகற்பங்களிற் புகுந்து பேசாது மௌனமாய் நிருவிகற்ப சமாதியைக்கொள்ளும் பெரியார்க்கு முக்கண் இறைவனாகிய நீயே ஞானாசிரியனாய் உண்மைநெறியை யுணர்த்தி ஆனந்த நிலையை யருள்வாய்; அத்தகைய யோகாப்பியாசத்தைக் கைக்கொள்ளலாமென்றால், அந்த யோகிகள் அது தமக்கே உரியதென்றும், அந்நிலை யுணராத எனக்குத் தகுதியற்றதென்றும் என்னை இகழ்வர்; தனக்குத்தானாய் அயர்ந்து தனித்திருந்து நின்னைச் சிந்திக்கலாமென்றாலும் மாயையை யேவி என்னைச் சோதிக்கின்றாய்; இங்ஙனமிருப்பின் அடியேன் ஆனந்தநிலை எய்துவது முடியுமோ?" என்று இறைவன்பால் தம் குறையைக்கூறி முறையிடுகின்றார். ஆசிரியர், பரமசிவனே குருவடிவமாய் வந்து அதிதீவிரபக்குவமுடையாருக்கு அருள்வரென்பதை, "அருபரத்தொருவ னவனியில் வந்து, குருபரனாகி யருளிய பெருமையை" என்ற திருவாசகத்தின் அடிகளால் உணரலாம்.

நிருவிகற்பம்—விகற்பமில்லாதது.

பரமகுரு—மேலானகுரு.

போக்கு வரவு—இறப்பு பிறப்பு.

சங்கித்தல்—மதித்தல்.

2. "மௌனதேசிகனே! நீ என் அறிவுக்குள்ளே அறிவாயிருந்து உணர்த்தும் மூலத்தினை யுணர்ந்து சும்மாவிருந்து சுகம் பெறாமல் வருந்தினேன்; இவ்வறியாமையைத் தீர்ப்பாய்; என் மனவருத்த முணர்ந் தகற்றுவார் வேறெவர்? உலகத்தாரின் பன்னெறிகளையும் நான் விரும்பேன்; நின்பொன்னடியே எனக் குரியது; ஆதலின் என்னை ஆட்கொள்வாயாக" என்பது இதன்கருத்து.

உளப்பாடு—மனவருத்தம்.

3. "உன்னை அறிந்துகொள்ள வல்லவர் யாவர் என்ன அநேக வேதங்களெல்லாம் கூறுகின்ற பெரிய விவேகமே! ஆனந்த வெள்ளமே! உயர்ந்த கடவுளே!" என்று இதில் ஆசிரியர் இறைவனைத் துதிக்கின்றார்.

அனந்தம்—முடிவற்றவை; எல்லையில்லாதவை.




## உள்நாட்டுப் பொருள்களின் உயர்வு.

உலகத்தில் ஏற்பட்ட பல நாடுகளிலும் ஆங்காங்குள்ளவர்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய எண்ணிறந்த பொருள், கள்எல்லாம் வல்ல இறைவனால் கிருபா நோக்கங்கொண்டு படைக்கப்பட்டிருக்கின்றன. இத்தகைய நாடுகளில் சிலவற்றில், உள்ள மனிதர் புறநாட்டுப் பொருள்களில் எதையும் விரும்பாவண்ணம் அவர்க்கு வேண்டுவனவெல்லாம் பூரணமாக நிறைந்திருக்கின்றன; சிலநாடுகள் புறநாட்டுப் பொருள்களில் சிலவற்றை மாத்திரம் எதிர்பார்க்கக் கூடியனவாயிருக்கின்றன; சில நாடுகள் மிகுதியும் அன்னியநாட்டுப் பொருள்களையே எதற்கும் எதிர்பார்க்கக்கூடியனவாயிருக்கின்றன. இப்படியிருப்பினும் இவற்றுள் எந்நாடு, புறநாட்டுப் பொருள்களை மிகுதியும் எதிர் பாராமல் தன்னிடத்தே உற்பத்தியாகும் பொருள்களையே கொண்டு உயிர்வாழ்க்கையை நடத்துகின்றதோ அது, புறநாட்டுப் பொருள்களை எதிர்பார்க்கக் கூடியதாயிருப்பினும் எப்பொழுதும் தாழ்ந்த நிலைமைக்கு வராது; எந்நாடு மிகுதியும் வெளிநாட்டுப் பொருளை விரும்புகின்றதோ அது, வேற்று நாட்டுப் பொருளின் உதவியை வேண்டாதபடி எல்லாம் விளையத்தக்க மேம்பாடுற்றதாயிருப்பினும் விரைவில் தாழ்ந்த நிலைமைக்கு வந்துவிடும். மனிதர் வாழ்க்கைக்கு இன்றியமையாத எல்லாம் விளையத்தக்க நாடே புண்ணிய பூமியாம்; மற்றவை அப்புண்ணியத்திற் குறைந்தனவேயாம். யாவுந்தரவல்ல புண்ணிய பூமியில் உள்ளவர்களும் சிறந்தவர்களேயாவர்; மற்றையநாட்டினர் அத்தகைய சிறப்பிழந்தவரே. எனினும் புண்ணிய பூமியில் உள்ளவர்களும் தங்கள் பேதைச் செய்கைகளால் சிறப்பிழந்துவிடுவர்; புண்ணியக் குறைவான நாட்டிலுள்ளவர்களும் தங்கள் விவேகச் செயலால் மேம்பாடடைந்துவிடுவர்.

நாட்டியல்களைப்பற்றி ஆராயுமிடத்து நம்மிந்திய நாடானது எல்லாவற்றிலும் ஏற்றமுடையதென்பது விளங்கும். மனிதவாழ்க்

கைக்கு எவை எவை அவசியமானவையோ அவைகளெல்லாம் இங்கே உற்பத்தியாகின்றன. ஆகாரத்திற்கு உபயோகமாம் தானியவகைகள் எண்ணிறந்தவை இங்கே உண்டு; உப்பு, புளி, காரம் முதலிய அறுசுவைப் பொருள்களெல்லாம் நிறைந்திருக்கின்றன; சுவையுள்ள கனிகளும் கிழங்குகளும் எண்ணற்றனவாய் மல்கியிருக்கின்றன; நெய் வஸ்துக்களுக்கும் குறைவில்லை. ஆடை நெய்தற்குரிய பருத்தி, பட்டு முதலியவைகளெல்லாம் ஏராளமாக உற்பத்தியாகின்றன; கம்பிளி முதலியன நெய்தற்குரிய பொருள்களும் எளிதிற்கிடைக்கின்றன; ஆங்காங்கே பலவர்ணப் பட்டாடைகளும், நூலாடைகளும், கம்பளங்களும் நெய்யப்படுகின்றன; மனிதரின் ஆபரணங்கட்குரிய தங்கம், பொன், வெள்ளி முதலியவைகளும், பாத்திர பண்டங்கள் செய்யத் தக்க செம்பு, பித்தளை, இரும்பு முதலிய உலோகங்களும் நிரம்பியிருக்கின்றன; அவற்றைச் செய்யும் அரிய தொழிலாளரும் இருக்கின்றனர்; மனிதர்க்கு நோய்வராமல் தடுக்கக் கூடியனவும், வந்த பிணியை அகற்றக் கூடியனவும், உடம்பைப் பலப்படுத்தக் கூடியனவுமாகிய மூலிகைகளும், மருந்துகளும், சஞ்சீவிகளும் மிகுந்திருக்கின்றன; உயர்ந்த பெட்டிகளும், கட்டில்களும், நாற்காலிகளும், சிறு பிள்ளைகட்குரிய விளையாட்டுச் சாமான்களும் செய்வதற்குரிய சந்தனமரம், தேக்கு, கருங்காலி முதலியனவாகிய பலவகை மரங்களும், தந்தங்களும் கிடைக்கின்றன; ஏலம், இலவங்கம், ஜாதிக்காய், குங்குமப்பூ, தேன் முதலாக மலையிலுள்ள பொருள்களும், முத்து, பவளம், அம்பர் முதலிய கடற் பொருள்களும் அதிகம் உற்பத்தியாயிருக்கின்றன; வாசனை வஸ்துக்களெல்லாம் மலிந்து கிடக்கின்றன; வெள்ளி, செம்பு, பித்தளை, ஈயம், இரும்பு, நாகம் முதலியவற்றுற் செய்யப்படும் பாத்திரங்களுக்குக் குறைவில்லை. பயிர்த்தொழிற்குரிய கால்நடை முதலிய சாதனங்களெல்லாம் இருக்கின்றன. ஏறிச் செல்வதற்குரிய குதிரைகளும், பலவகை வண்டிகளும் உள்ளன. மனிதர்க்குத் தக்க சீதோஷ்ண நிலைகளும் சரியாய் அமைந்திருக்கின்றன. எல்லாவகைச் சாஸ்திரங்களும் இருக்கின்றன; ஆத்மஞானிகளும், யோகிகளும், வித்வான்களும் எண்ணிலர் இருக்கின்றனர்; இனி மேலும் இருப்பர்.

இங்ஙனம் எல்லாம் நிறைந்த தன்மையினாலே 'இவ்விந்தியாவானது மற்றைய நாடுகளுக்கெல்லாம் கற்பகம்போலவும், காமதேனு போலவும் நின்று வேண்டுவன நல்கி உதவிபுரிந்து வந்தது,

வருகிறது; எதிர்காலத்தும் துணைபுரியும். புறநாட்டார்கள் ஒரு பசுவினிடத்தில் பாலைக்கறந்து அனுபவித்தல்போல இந்தியாவினிடத்தே பயன்கொண்டு இன்புறுகின்றனர். இத்தகைய புண்ணிய பூமியாகிய இந்நாட்டில் முற்காலத்திலிருந்தோர், எல்லாம் இங்கே கிடைப்பதால் மிகுதியும் புறநாட்டுப் பொருள்களை விரும்பாமல் அவற்றுள் இங்கில்லாதனவும், இன்றியமையாதனவுமாகிய சிலவற்றை மாத்திரம் ஏற்றுக்கொண்டு உயிர்வாழ்க்கை நடத்தி இன்புற்று வந்தனர்; செல்வத்தாலும் சிறந்து விளங்கினர். இத்தகைய செல்வம் பொருந்திய நாடு—வளமை நிறைந்தநாடு—தெய்விகநாடு இப்பொழுது வறுமைக் கடலில் மூழ்கி மறைந்து கிடக்கின்றது. இதன் உதவியை நாடி நின்ற மற்றைய நாடுகளெல்லாம் செல்வத்திற் சிறந்து விளங்குகின்றன.

இதற்குக் காரணமென்னவெனில், நம் நாட்டிலுள்ளவர்கள் மிகுதியும் வேற்றுநாட்டுப் பொருள்களை விரும்புவதும், மற்ற நாடுகள் அங்ஙனம் விரும்பாமையுமேயாம். நம் நாட்டிலுள்ளவர்களிற் பெரும்பான்மையோர் மேல்நாட்டு நாகரீக மயக்கங்கொண்டும், இடம்பத்தை விரும்பியும், தற்பெருமைகொண்டும், பேதைமை மேலிட்டும் அவசியமில்லாமலிருக்கும்போதே மிகுதியும் புறநாட்டுப் பொருள்களையே விரும்பி வாங்கி உபயோகிக்கின்றனர்: இரண்டு மூன்று ரூபாய் செலவில் உள்நாட்டுத் துணிகளில் உடை தைத்துக்கொள்ளச் சௌகரியமிருக்கும்போதே இருபது இருபத்தைந்து ரூபாச்செலவில் வேற்று நாட்டுத் துணிகளில் உடைகள் தைக்கிறார்கள்; நம்நாட்டு ஆடைகள் உறுதியுடையனவாயிருப்பதால் அதிக நாளைக்கு இருக்கின்றன; மற்றவை வன்மையற்றனவாய் விரைவில் கிழிந்துபோகின்றன. நம் நாட்டில் சிறந்தவேலைப்பாடுகளுடனும், அழகுடனும் அமைந்த ஆபரணங்கள் பல இருந்தும், புறநாடுகளில் இருந்து கலப்புப் பொன்னாலும், தாழ்ந்த மேற்பூச்சு உலோகங்களாலும், உரோமங்களாலும், வேறு சிலவற்றாலும் செய்யப்பட்டுவரும் சங்கிலி, வளையல், முதலிய சில ஆபரணங்களையும், வேறு சிலவற்றையும் அலங்காரப் பொருள்களென அணிகிறார்கள். சரீரசுகத்திற்கேதுவான எத்தனையோ வகை ருசிகரமான ஆகாரவகைகளும், பலகாரவகைகளும் செய்துண்ண வேண்டிய சாதனங்களெல்லாம் இங்கிருக்கும்போது வெளிநாடுகளிலிருந்து பல நிஷேதப் பொருள்களால் செய்யப்பட்டுவரும் ஆகாரங்களையும், பலகாரங்களையும் உட்கொள்ளுகின்றனர். உயர்ந்த

வாசனைத் தைலம் முதலியனவெல்லாம் இங்கே கிடைக்கக் கூடியன வாயிருக்கப் புறநாடுகளிலிருந்து தாழ்ந்த சில வஸ்துக்களால் செய்யப்பட்டுவரும்—மூக்கைத் துளைக்கும் கடின வாசனையுள்ள வஸ்துக்களை உயர்ந்தவைகளென வாங்கி உபயோகிக்கிறார்கள். நம் நாட்டில் உற்பத்தியாகும் உலோகப் பாத்திரங்களை வீட்டில் வாங்கி உபயோகித்தால் அவ்வகையில் மேலும் துட்டுச் செலவுண்டாகாதபடி அவை எத்தனையோ தலைமுறைகள் வரை நிலைத்திருக்கின்றன. அவற்றைவிட்டு ஒரு சிறு காற்றடித்தாலும், யாரேனும் தட்டிவிட்டாலும் கீழே விழுந்து தூள் தூளாக நொறுங்கிப்போகக் கூடிய புறநாட்டுக் கண்ணாடிச் சாமான்களையும், பீங்கான் வஸ்துக்களையும் வீட்டில் வாங்கி நிரப்புகிறார்கள்; இத்தகைய சாமான்களில் ஒன்று ஒருவனுடைய ஆயுளில் நூற்றுக் கணக்காக வாங்கித் தீருகின்றது. இங்கே கால் ரூபாச் செலவில் சரிப்படுத்திக்கொள்ளக் கூடிய ஒரு மருந்துக்குப் பதிலாகப் புறநாட்டிலிருந்து வரும் ஒரு சாதாரணமருந்தை அதிக விலைகொடுத்து வாங்குகிறார்கள். நம் நாட்டில் உற்பத்தியாகும் பல தைல வர்க்கங்களைக்கொண்டு குளிர்ந்த விளக்கு எரிக்கத் தக்க சாதனங்களிருக்க, கெரொஸினுயில் முதலியவற்றை வேற்று நாட்டிலிருந்து பெற்று வீட்டில் விளக்கெரித்துக் கண்ணெரிச்சலடைகிறார்கள். சற்று அஜாக்கிரதையாயிருந்தால் வீட்டையும், வீட்டிலுள்ள மனிதர்களையும் அவை தகனஞ்செய்துவிடக்கூடியனவாயிருக்கின்றன. இன்னும் நம் நாட்டில் சொற்பவிலையில் கிடைக்கக் கூடிய குழந்தை விளையாட்டுப் பொருள்கள் இருக்க, சிறிதும் பயனற்ற புறநாட்டு விளையாட்டுச் சாமான்களையெல்லாம் ஏராளமாக வாங்கி வீடுகொள்ளாமல் நிரப்புகிறார்கள். ஊர்ப்பிரயாணம் முதலியன செய்வதற்கு நம்முடைய புராதன குதிரை வண்டிகளும், மாட்டு வண்டிகளும், ஏறு குதிரை முதலியனவும் இருக்கும்போது அளவில்லாப் பொருள் கொடுத்து, வேற்று நாட்டிலிருந்து வரும் மோட்டார் யமன்களை வாங்கி எங்கும் பரப்பி ஆயிரக்கணக்கான உயிர்க்கொலைகளையும், அவசப்தங்களையும் உண்டாக்குகிறார்கள். இது அவசரமான காரியங்களுக்குத் தூரயாத்திரை செய்வதற்கும், விரைவில் காரியங்கள் பார்ப்பதற்கும் அனுகூலமாயிருக்கிறதென்று பலரும் நினைக்கின்றனர். மோட்டார் இல்லாத காலத்தில் எந்தக் காரியம் தடைப்பட்டிருந்தது? எந்தச் செல்வாக்குக் குறைந்திருந்தது? என்பதை இவர்கள் ஆலோசிப்பார்களாயின், முன்னிருந்ததைக் காட்டிலும் இப்பொழுது பெரிய சௌகரியமொன்றும் ஏற்படவில்லையென்பதும், பொருள் நஷ்டமும் உயிர்ச்சேதமுந்தான் பெரும்பான்மையும் கண்ட பலன் என்பதும் விளங்கும்.

புறநாட்டார் இங்குக் கிடைக்கும் பல பொருள்களைச் சொற்பச் செலவில் கவர்ந்து கொண்டுபோய் வேற்று ரூபமும் மாற்றுப் பெயரும் கொடுத்து மீண்டும் நமக்கனுப்பி அதிக விலைக்கு விற்கின்

றனர். அவர்களுடைய நாட்டுப் பொருள்களையும் மிகுந்த விலைக்கு விற்கின்றனர். நம் நாட்டவர், தங்கள் பொருள்களைக் குறைந்த விலைக்கு மிக்க தாழ்வோடு புறநாட்டாரிடம் சேர்க்கின்றனர்; அன்னியநாட்டு வஸ்துக்களை மாத்திரம், அவர்கள் செருக்கோடு கொடுக்க அதிக விலை கொடுத்து வாங்குகின்றனர். சிலர், நம் நாட்டினர்க்கு அவசியமானபொருள்கள் இங்கில்லாமல் வெளி நாட்டிலிருந்தால் அவற்றை வாங்காமல் எப்படிக் காரியம் நடக்கும் என்று கேட்கக்கூடும். அப்படி ஏதோ சில இல்லாத பொருள்களை நம்மவர் வாங்குவதைப்பற்றி நாம் இங்குச் சொல்லவில்லை; அனுவசியமான பொருள்களை அளவின்றி அதிக விலை கொடுத்து வாங்குவதைப்பற்றியே கூறுகிறோம். நம் நாட்டிலிருந்த பண்டைக் காலத்தவரும் இன்றியமையாத சில பொருளகளை அன்னிய நாட்டிலிருந்து பெற்றுக்கொண்டுதானிருந்தார்கள். ஆனால் இக்காலத்தவர்களைப்போல அன்னிய நாட்டுப் பொருள் மயமாகவே வீட்டை நிரப்பிக் கெட்டுப் போகவில்லை. நம் நாட்டுப் பொருள்களையே மிகுதியும் நம்மவர் உபயோகித்து வந்தால் நம்முடைய பணத்தை நம்மவரே அனுபவிப்பர்; நம் பணம் வெளித்தாண்டாது; புறநாட்டுப் பொருள்களை அதிகம் விரும்புவதால் நம்மவரிடமுள்ள பணமுழுவதும் வெளியேறி விடுகின்றது. அதனாலேயே இந்தியா வறுமைக்குட்பட்டு மயங்கிக் கிடக்கின்றது.

இதைப்பற்றிப் பல பெரியார் பிரசங்கங்கள் புரிந்து வருகின்றார்கள்; ஒவ்வொரு பத்திரிகைக்காரர்களும் எழுதி வருகின்றார்கள். எனினும் வேற்றுப்பொருள்கொள்ளும் பேதைமையான வழக்கம் நம்மவரைவிட் டொழிந்தபா டில்லை; காந்தியடிகளின் உபதேசத்தால் அன்னிய ஆடையை நீக்கிக் கதர் உடுத்தும் வழக்கம் மட்டும் விருத்தியாகி வருகிறது. மற்ற வகைகளில் புறநாட்டுப் பொருளை விரும்புவதை நம்மவர் குறைத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. மேலும் மேலும்அப்பழக்கம் அதிகரித்துக்கொண்டே வருகின்றது. பத்து வருடங்கட்கு முன்னர் ஆங்காங்கே அருமையாகக் காணப்பட்ட மோட்டார் இப்போது எங்கும் பரவியிருக்கிறது. இதனாலேயே நம்மவர் தாழ்ந்த நிலைமைக்கு வரக்கூடிய மார்க்கத்திலேயே தீவிரமாய்ச் சென்றுகொண்டிருக்கிறார்களென்பது விளங்கும். ஆதலின், இதைப்பற்றி நாம் சிறிது விளக்கினோம்; நம்நாடு செழிப்புற வேண்டுமானால், ஒவ்வொருவரும் புறநாட்டுப் பொருளை விரும்புதலை ஒழிக்கவேண்டும்; முற்றும் விடமுடியாவிடினும் தாங்கள் இயன்றவரையிலாவது, அனுவசியமான சிலவற்றையாவது விட முயற்சிக்கவேண்டும். தேச நலத்திற்கான பல துறைகளில் இது முக்கியமானதாகும். ஆதலின் எல்லோரும் இக் கொள்கையைக் கடைப்பிடித்தொழுகுமாறு இறைவன் அருள் புரிவானாக.

ஓம் தத் ஸத்.




## ஸ்ரீ மாதவ கோவிந்த ரானடே.

(14-ம் பக்கத் தொடர்ச்சி.)

### பொதுஜன ஊழியம்.

அக்காலத்தில் இந்தியர் எத்தகைய உயர்ந்த பதவியை வகிக்க அரசாங்கத்தாரால் அனுமதிக்கப்பட்டிருந்தனரோ அப்பதவி ரானடேக்கு அளிக்கப்பட்டிருந்தது. அரசாங்க நிர்வாக உத்யோகஸ்தர்கள் அரசியல் தேசீய விஷயங்களில் தலையிடலாகாதென்ற நிபந்தனை அக்கால முதலே அமுலி லிருந்துவந்தது. நியாயவாதிகளாயிருந்து ராஜீயத்துறையில் பெருஞ் சொற்பொழிவுகள் நிகழ்த்திவந்த பல சொல் வல்லுநர், நீதிபதி ஸ்தானங்களையடைந்து பேழைப் பாம்பென அடக்கப்பட்டு வந்தனர். ஆனல் ரானடே 'தேசசேவை வேறு, ராஜீயம் வேறு, உத்யோகம் வேறு' என்ற கொள்கையுடையவராதலால்—தம் நாட்டின் நன்மைக்கெனப் பாடுபடும் சுதந்திரம் ஒவ்வொருவருக்கு முண்டென்னும் உண்மையை நிலைநாட்டவந்த உத்தமராதலால் தேசீய விஷயங்களில் பகிரங்கமாகவே அவர் உழைத்துவந்தார். அகில இந்திய காங்கிரஸ் மகாசபை நிறுவப்பட்டகாலத்திலிருந்தே அதனை பாரதபூமியின் எதிர்கால நன்மைக்கென்று கிடைத்த ஓர் நிதியென்றேத்திப் போற்றிவந்த பலருள் இவர் முதல்வரானவர். மாகாணங்களில் காங்கிரஸ் தனது வேலையை முதல் முதலாகத் தொடங்கியபொழுது, துரைத்தனத்தார், ராஜத்துரோகமான சூழ்ச்சிகளைக் காங்கிரஸ் மகாசபை செய்து வருகின்றதெனச் சம்சயித்தும், ரானடே அதன் காரியக்கமிட்டி கூட்டங்களுக்குச்சென்று அக்கூட்டத்தை ஊக்கி அவர்க்கு வேண்டியவற்றை உபகரித்து வந்தார்; சில ஆண்டுகள் காங்கிரஸ் வேலைகளை மேற்பார்வை பார்த்துவந்தார். "மேன்மைதங்கிய சக்ரவர்த்தினியின் ஆதரவில் உரிமையுடன் இந்தியர் தேசநலம் பெருகும் வகையில் ஆட்சி முறையை அமைக்க வேண்டு" மென்பதே அவரது அரசியல் கொள்கை.

அவர் ஓர் வித்தசாமானியவாதி. ஜனசார சீர்திருத்த இயக்கத்திற்காக அவர் பெரிதும் பாடுபட்டு வந்தார். அவர் நண்பராகவும், ஞானசாரியராகவும், வழிகாட்டியாகவும் மக்களின் உரிமைக்காக அரசாங்கத்தாருடன் வாதித்து வந்தார். பிறப்பால் உயர்வுதாழ்வைக் கற்பிக்கும் மூடநம்பிக்கையைச் சமூகத்தினிடமிருந்து போக்க அக்கொள்கை வேரூன்றியிருந்த அக்காலத்தில் துணிந்து முன்வந்து போராடியவர் ரானடேயேயாம். இவர் சர்வஜன சமரஸ மகாநாட்டைக் கூட்டிவைத்து அதன் காரியதரிசியாக் உழைத்துவந்தார். பொது வாழ்வில் அனுசிதமான அனுஷ்டானங்களும்,

கேவலமான ஒழுக்கங்களும் நமது மூடநம்பிக்கையாலேற்பட்டனவேயன்றி, பூர்வீகமான சாத்திரங்களில் அவற்றை வலியுறுத்தும் ஆதார மேதுமில்லையென்பதை அவர் விளக்கிய வியாசங்களால், அவருடைய பரந்த நோக்கத்தையும், சிறந்த ஒழுக்கத்தையும், ஆழ்ந்த கல்வியையும் ஊகித்துணரலாம். ரானடே சர்வதேச ஜனசார விஷயங்களைச் சீர்தூக்கி அவற்றை நமது அனுஷ்டானங்களுடன் ஒப்பிட்டுப் பல நூல்கள் மூலம் வெளியிட்டார். தாம் அறியாத்தன்மையால், மதத்தின்பாற்சார்ந்து தமது தேயத்திலேயே தோன்றிய சகோதரமக்களை விலங்குகளெனத் தாழ்த்தி நடத்தியதற்காக வருந்திக் கழுவாய்ச் சடங்கு (பிராயச்சித்தம்) செய்துகொண்டனரென்பது அவருடைய சரித்திரத்தினின்று புலனாகின்றது. இதனால் அதிவைதீக மதக்காரர்கள் ரானடேயை வெறுத்து வந்தனர்.

## மதசேவை

அவருடைய ஜீவியத்தில் பிரதான சமாஜத்தின் ஸ்தாபனமே ஓர் முக்கிய சம்பவமாம். ரானடே அதன் ஸ்தாபகராய் விளங்கியதுமன்றி, மத விஷயங்களில் அவர் ஸேசுவரமதத்தை வற்புறுத்தி வந்தார். பாரத வர்ஷமும் அதன் வேத வேதாந்த இதிகாச புராணங்களும் தோன்றிய காலந்தொட்டு ஸேசுவரமதம் நம் நாட்டிலிருந்து வருகின்றதென அவர் பிரதான சமாஜத்தின் ஆதரவில் தக்க ஆதாரங்களுடன் பேசிவந்தார். கடவுள் ஆத்மரூபியாய் ஒவ்வொரு மனிதனிடத்தும் விளங்கி அவனுடைய ஒவ்வொரு கர்மாவிலும் வியாபித்து உட்புகுந்து நிற்கின்றன ரென்பதே அவர் ஸ்தாபித்த சமாஜத்தின் முக்கிய நம்பிக்கை. 'இந்திய ஸேசுவா மதம், ஸேசுவா மதவாத தாத்பரியம்' என்ற அவருடைய சிறுநூல்கள் ஜனங்களுக்கு சமாஜப்பற்றைப் புகட்டுந் தன்மையனவாய்த் திகழ்ந்தன. அவருடைய சரித்திரத்தை யாராயுங்காலத்து அவர் கைத்தொழில் அபிவிருத்திக்கென உழைத்துவந்தனரென்பதும், பல கண்காட்சி மகாநாடுகளைத் திறந்துவைத்தன ரென்பதும், காங்கிரசுடன் கைத்தொழில் அபிவிருத்தி சங்கத்தையும் சேர்த்துவைத்தனரென்பதும், ஹிந்துமகாசபையையும் காங்கிரசின் ஓர் பிரிவாக அமைத்தனரென்பதும் காணக்கிடக்கின்றன.

## முடிவுரை

உயர்ந்த பதவிகளை அவர் வகித்திருந்தும் ஆடம்பரமற்ற தூயவாழ்வை நடாத்தி வந்தார். அவருடைய நண்பர்கள் அவரை ருஷியென்றழைப்பது வழக்கமாம். ஒரு ஏழைமகன் தனக் கேற்பட்ட இடுக்கண்ணைப் போக்கிக் கொள்வான் கருதி ரானடேயைப் பேட்டிகண்டபொழுது அவர் அவ்வெளியனைச் சமத்துவ உரிமையுடன் அருகேயழைத் தமரச்செய்து அவனுடைய குறைகளைப் பொறுமையுடன் கேட்டு ஆதரித்தனராம்.

அக்காலத்தில் ரானடே தீவிர தேசீய வாதியாக விளங்கினர். எவ்விதத்திலோ பாரதமக்கள் சுய ஆட்சிபெற்று வாழவேண்டுமென்ற எண்ணம் முதல் முதலாக அவருள்ளத்திலேயே உதித்தெழுந்தது. பாரதபூமியும் அதன்

தொன்மையான நூல்களும் அவருக்கு ஆனந்தத்தை யூட்டுவனவாயிருந்தன. அவர் உத்யோகத்தினின்றும் விலகியபின்னர் காங்கிரசில் சேர்ந்து அதன் தலைவராக விளங்கினர். லக்ஷ்மணபுரியில் 1900-ம் வருடத்தில் கூடிய 'இந்திய வித்த சாமானிய சங்கத்தின்' ஆதரவில் அவர், "ஆயிரமாண்டுகட்கு முந்திய இந்தியா" என்பதனடியாக தென்னிந்திய வட இந்தியர்களின் பூர்வசரித்திரங்களையும், வசிஷ்ட விஸ்வாமித்திராதி மஹரிஷிகளின் விஷயங்களையும், இக்ஷ்வாகு, த்விலீபன், ரகு முதலான ஆரியமன்னர்களின் பேராற்றலையும் ஆராய்ச்சியுடன் விளக்கிப் பேசினர். அவர் இந்தியநாட்டைக்குறித்தெழுதியுள்ள நூலில் சமயம், மெய்ஞ்ஞானம், ஜாதி, விக்ரஹ ஆராதனம், தண்டநீதி, பாஷாஞானம், ரசாயனம், கணிதம், வைத்தியம், பூவிவரணம், வானசாஸ்திரம், சிருஷ்டிக்கிரம விவரணம், ரஸவாதம், ஜோதிஷம் முதலிய விஷயங்களை விரிவாக விளக்கும் எண்பது அத்தியாயங்களுள்ளன. ஸ்ரீ மாதவ கோவிந்த ரானடேயே காங்கிரசின் முதல் தலைவராவர். அம்மகாசபையை முதலிலிருந் தாதரித்துச் சுமார் பதினைந்தாண்டுகள்வரை அதனை வளர்ப்பதில் தமது கருத்தைச் செலுத்தியவரும் இவரே.

இப்பெரியார் 1901-ம் வருஷம் ஜனவரி மாதம் 16-ந் தேதி வானுலகேகினர். பம்பாய் நகர நீதிமன்றங்கள் அன்று மூடப்பட்டன. பொது ஜனங்கள் கூட்டங்கூடித் தம தனுதாபத்தை வெளியிட்டனர். காங்கிரஸைப் போற்றும் உத்தம தேசபக்தர்கள் ரானடேயை நினைத்து வணங்கக் கடமைப்பட்டவராவர். ஸ்ரீ லக்ஷ்மீகாந்தன்.

---

## இன்று காங்கிரஸ் நிலை.

உலகிலெங்குமே அன்பர்கூடி அன்பினுற் ருடங்குங் கருமங்களெல்லாம் வெற்றிபெற்றிலங்கும். அருந்திறல் வீரராலும், அதிரதமன்னர்களாலும், துரகத்ததிபர்களாலும், வேலெறி படைகளாலும் வெல்ல ஒண்ணாத பகைவரை வென்றிடும் அன்பு. தூய அன்பினுல் துயரம் நீங்கும். ஆய அன்பினுல் அருளது பெருகும். பிளவும், குரோதமும் பேதமை பெருக்கும். சாத்விகமும் அஹிம்சையும் அன்புருக்கொண்டவை. அவ்வழி நிற்றலே விடுதலை. ராஜசம் மனிதனை அடிமைப்படுத்துந் தன்மையது; துன்பம் விளைவிப்பது; அன்பெனுங் கடவுளைத் திரைகொண்டு மறைப்பது. பாரதத்தாய் அன்புமயமானவள். அருட்பணி செய்தவள் துயரம் நீங்கத் துலங்குவது காங்கிரஸ் மகாசபை. அதனைப் போற்றுவது ஒவ்வொரு இந்தியனுடைய சுதர்மம்.

காங்கிரஸ், அது தொடங்கியது முதல் மகத்தான வேலைகளைச் செய்து வந்திருக்கின்றது. ஆரிய பூமியிற் ருேன்றிய மகான்களும் அறிவாளிகளும் காங்கிரஸ் மகாசபையின் தலைமைப் பதவிகளை யேற்று நாட்டின் நன்மை பெருகப் போராடி வருகின்றனர்; மேல்நாடுகளுக்குச் சென்று காங்கிரஸின் பேரால் பாரத தர்மத்தை ஸ்தாபித்து வெற்றித்தாருடன் வீரமொழிபேசி வந்திருக்கின்றனர். பாரததேவியின் அருந்தவப்புதல்வரான மகாத்மாவின் மணிமொழிகளை யேற்று, வெளிநாட்டுப் பத்திரிகைக்காரர்களும் ; மேனுட்டு

அரசியல் வாத நிபுணர்களும் காங்கிரஸின் கொள்கைகளைப் போற்றித் தமது தேசங்களிலவற்றைப் புகுத்தினர். சமீபத்தில் ஐரோப்பாவில் நடந்த வெம் போரால் அன்பினருள்மங்கி, இரத்தவெள்ளம் பெருக்கெடுத்தோடத் துன்ப சாகரத்தில் மூழ்கிய ஜர்மனி, அடிகளி னற்புத மொழிகளா லாறுதலடைந்து தனது முன்னேற்றத்திற்கென அவதரித்தவர் அவரே யென்றேற்றது. இந் நல்லதோர் இயக்கத்தை எதிர்க்க முற்பட்ட பல வம்பர், இருந்த இடமுந் தெரியாதொழிந்தனர். காங்கிரசுக்கு விரோதமாக வேலைசெய்துவந்த குழாத்தினர் ஆதரவற்றுத் தமதுகொள்கைகளைத் திருத்தியமைத்துக்கொண்டு காங்கிரஸ் தெய்வத்தை வழிபட்டனர். காங்கிரஸ் மகாசபையின் போற்ற லுடைய தலைவர்கள் தியாகமூர்த்திகளாகத் திகழ்ந்தமையின்—அச்சபையில் சுயநலமற்ற சுத்தப் பரிமணம் வீசினமையின் அதன் புகழ் வானமளாவி யிருந்தது.

ஆனல் இன்று நம் நாட்டின் நிலேயென்ன? நாற்பது ஆண்டுகளாகத் தலே வர்கள் செய்துவந்த உபதேசங்களின் முடிவென்ன? வென்று சற்று சிந்தித் துப் பார்க்குங்கால் மனமானது பிளக்கின்றதேயன்றி, ஆறுதலடையச் சிறி தும் இடமே இல்லே. காங்கிரஸோ சல்லாப உல்லாச மேடையாகிவிட்டது. உண்மைத் தேசாபிமானம் உடையார் வெகு சிலர். தியாக இலக்கணமுடை யாரற்று ரஸவாதிகள் பலர் காங்கிரசில் வெளிச்சம் போடுகின்றனர். தலேவ ரைத் தூற்றுபவர் மலிந்துவிட்டனர். தலேவரென்ற நியதியில்லாது தடி யெடுத்தவரெல்லாம் தண்டக்காரராகிவிட்டனர். ஒவ்வொருவரும் உள் நோக்கமொன்றும் வெளிவேடம் வேறொன்றுமாக உலாவுகின்றனர். இயக் கத்தின் எழிலேபோய் மயக்கம் மிகக் கக்ஷிகள் மலிந்துவிட்டன. இடறி விழுந்தால் அங்கொரு கட்சி! அடிக்கொரு அந்தரங்க மகாநாடு! வீட்டிற் கொரு விசேட மகாநாடு. அன்புச்செங்கோலோச்சும் அடிகளின் அமுத வச னங்களின் பயனெல்லாம் கட்சி கூட்டும் காட்சியாகவே முடிந்தது. தேச மகா கைங்கரியத்திற்கு முக்கியமாக ஒற்றுமை வேண்டியிருக்க, அணுவள வும் அஃதில்லாது வேற்றுமை மிகுந்திருக்கும் பரிதாப நிலேயை நாமென் னென்போம்! அஃதின்றி அரும்பாடுபட்டாலும் ஆவதெது? இதையறியாது மகாநாடு கூட்டித் தீர்மானங்களேக் கடிதத்தில் எழுதிவைத்தால் அந்த எட் டுச் சருக்கரை இனிக்குமோ?

இவற்றிற்கெல்லாம் காரணம் வகுப்புவாதமேயாம்; ஒவ்வொரு வகுப் பாரும் குறுகிய நோக்கமுடையவராய்ச் சுயநலம் பாராட்டும் பேதமையே யாம். இந்தியாவில் எத்தனே ஜாதிகளிருக்கின்றனவோ அத்தனே வகுப்பா ரும் மகாநாடு—சங்கம் கூட்டுகின்றனர்; அவரவர்கள் முன்னடைத் தலேயே முக்கிய நோக்கமாகக்கொண்டு "எங்கள் ஜாதி எண்ணுயிர மாண்டுகட்கு முன்னர் எழில்பெருக மன்னர்களாய் விளங்கி, கோயில்கள் கட்டிக் குளங்கள் வெட்டி......" என்று ஆரம்பித்து "ஆகையால் எங்களுக்கு எம். எல். ஸி.யில் நியமனம் கிடைக்கவேண்டும்" என்று முடிக்க வாரம்பித்துவிட்டனர்; தனித் தனிப் பத்திரிகைகளேத் தொடங்கிப் பதவிபெறுவதிலேயே கவனஞ் செலுத்

துகின்றனர். இந்த ஜாதி மகாநாடுகளில் 'கதர்' அணியவேண்டுமென்ற தீர்மானம்கூட நிறைவேறாதபோது, காங்கிரஸை வாழ்த்தும் எண்ணம் எங்கிருந்துதிக்கப்போகின்றது?

இஃது இவ்வாறாகச் சென்ற ஓராண்டாகச் சட்டசபைக்குச் சென்றுவிட்டால் சர்வாபீஷ்ட சித்திகளையு மடைந்துவிட்டதாக நினைக்கும் நேயரின் கூட்டம் அதிகரித்துவிட்டது. ஆற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம்; மகா நாடுகளையும், கட்சிகளையும் எண்ணிக் கூறல் அரிது. 'நான் பழய காங்கிரஸ் கட்சி, நான் புது-சட்டசபை-காங்கிரஸ்-சுயராஜ்யக் கட்சி, நான் மிதவாதி, நான் அமிதவாதி, நான் மித அமிதவாதி, நான் நியாயக்கட்சி, நான் சுயேச்சையென்று கூறும் பச்சோந்திக்கக்ஷி' என்று மனிதருக்கொரு கட்சியாக முப்பதுகோடி கக்ஷிகள் புறப்பட்டுவிட்டன. சாமானியரெல்லாம் காங்கிரஸ் மகாசபையின் ஆதரவில் தேசபக்தரென்று தம்மை விளம்பரப்படுத்திக் கொண்டபிறகு இன்று அம்மகாஸ்தாபனத்தைத் தூற்றவும் கலைக்கவும் முற்பட்டுவிட்டனர். இவற்றையெல்லாம் வெளிநாட்டுப் பத்திரிகைகள் வேடிக்கை பார்க்கின்றன. அயல்நாட்டார் கண்டு நகைக்கின்றனர். உள்நாட்டு வெளியீடுகள் வகுப்புவாதத்தாண்டவம் புரிகின்றன.

சகோதர சகோதரிகளே! சற்று ஆழ்ந்து நோக்குங்கள்! ஒன்றுபட்டால் தான் உண்டு வாழ்வு. ஒற்றுமையின்றேல் அனைவருக்கும் தாழ்வு. இவ்விதம் இன்னுஞ் சிலகாலம் நம் நாட்டில் பிளவுகள் மிகுமேல் நீங்கள் ஜயபேரியென்று நினைப்பதெல்லாம் பயமாரியாகவே வந்து முடியும். கக்ஷி வாதம் என்பதே வேண்டாம். அவை குரோதத்தைப் பெருக்குஞ் சொற்கள். ஆதலின் ஒன்றுகூடிப் பழமையான காங்கிரஸ் மகாசபையை ஏகோபிதமாக ஆதரியுங்கள். காங்கிரஸில் குற்றங் குறையுளவேல் திருத்தியமையுங்கள்! இதற்காகவே அடுத்த மகாசபை சென்னைக்கு வருகின்றது. காங்கிரஸ் தர்மமே கர்மமென்றறியுங்கள். வடநாட்டிலுள்ள இந்து முகமதியப் பிணக்கும், தென்னாட்டிலுள்ள பார்ப்பனப் பார்ப்பனரல்லாத போரும் ஒழிய அன்னையை வழிபடுங்கள். பாரததேவி மனம் பதறுகின்றாள். அவள் தனையர் குடியராயும், அடிமையாகவும் மிடிமை வாழ்விலியங்குவதைக் கண்டு கண்ணீர் வடிக்கின்றாள். அவளன்பில்லையேல் ஒன்றுமில்லை யென்பதை அறியுங்கள்.

"தேவி! நின் னொளி பெறாத தேசமோர் தேச மாமோ
ஆவியங் குண்டோ? செம்மை யறிவுண்டோ? ஆக்கமுண்டோ?
காவிய நூல்கள் ஞானக் கலைகள்வே தங்களுண்டோ?
பாவிய ரன்றோ? உன்றன் பாலனம் படைத்தி லாதார்"

என்றார் பாரதியாரும்.

ஸ்ரீதரன்.

## காந்தி தரிசனம்.

கதர் சாக்கல்ல! அது ஏழை படுந்துயர் போக்கும். வறுமையைத் தாக்கும்! சிறுமையை நீக்கும்! ஏழை வயிற்றிற்குக் கஞ்சி ஆக்கும்! சாக்கு சாக்கு என்று சாக்குச் சொல்லாதீர்! அதுதான் நாட்டின் விடுதலையை நோக்கும்.

—சக்ரவர்த்தி ராஜகோபாலாசாரி.




(12-ம் தொகுதி-553-ம் பக்கத்தொடர்ச்சி.)

## சந்நியாசலக்ஷணம்.

கர்மமானது மோக்ஷத்திற்குப் பரம்பரைச் சாதனமேயன்றி நேர் (சாக்ஷாத்) சாதனமாகாது. ஞானமே சாக்ஷாத் சாதனமாம். ஆகையால் சகல கர்மங்களையும் அறவே விட்டு ஞானத்தையே அடைய முயலவேண்டும். அப்படிச் சகல கர்மங்களையும் விடுவதே சந்நியாசமாம். சந்நியாசம் என்பதற்குச் சகல கர்மங்களையும் நன்றாக விடுதலைச் செய்வது என்பது பொருளாம். எங்ஙனமெனின், சந்நியாசம் என்னும் பதம் உபராமம் என்னும் சப்தத்தால் வழங்கப்படுகின்றது. உபராமம் என்பது விடுதலையாம். ஆகவே, (சம்=நன்றாக; நியாசம்=பரித்யாகம் அல்லது விடுதலை) சகல கர்மங்களையும் நன்றாகத் தியாகம் செய்தல் சந்நியாசமாம்.

கர்மங்களை என் விடவேண்டுமெனின்:— கர்மத்தாலுண்டாம் பலனாது நித்தியமானதன்று; அநித்தியமாகும். முத்தியோ நித்தியமானது. ஆகையால் நித்தியமான வீடுபேற்றை (மோக்ஷத்தை) அடைய விரும்புவோர்க்குக் கர்மத்தினால் ஒரு பயனுமில்லை. (கர்மத்தால் முத்திசித்திக்காதோ? எனின்: கூறுகிறார்.) கர்மத்தாலுண்டாகும் பயனானது உற்பத்தி செய்யத்தக்கதும் அடையத்தக்கதும் செவ்வைப் படுத்தத் தக்கதும் விகாரம் (வேறுபாடு) அடையத்தக்கதுமென நான்கு வகையாயுள்ளது. இவற்றைத் தவிர வேறொன்றில்லை. பிரம்மம் தனக்குத்தானே சித்தமாயிருப்பதாகலின் உற்பத்தி செய்யத்தக்கதல்ல; எப்பொழுதும் அடையப்பட்டே யிருக்கின்றதாகலின் அடையத்தக்கதுமல்ல; நிர்க்குணமாயும் நிர்மலமாயுமிருப்பதாகலின் செவ்வையாக்கத் தக்கதுமல்ல; கிரியையற்றதாகலின் விகாரமடையத் தகுந்ததுமல்ல (இவற்றை விவரிக்கிறார் ஆசிரியர்.)

**பிரம்மம் உற்பத்தியில்லாதது:**-"பிரம்மத்தின் உற்பத்திக்குக் காரணமாயுள்ளவனொருவனுமில்லை" என்னும் வேதவாக்கியத்தின்படி பிரம்மமே மற்றெல்லாவற்றின் உற்பத்திக்குக் காரணமா யிருப்பதன்றி அது மற்றொருவனால் உற்பத்தி செய்யத்தக்கதன்று.

**பிரம்மம் அடையப்படுவதன்று:**—அடைபவன் அடையப்படும்பொருள் என்னும் இவ்விரண்டிற்கும் பேதமிருந்தால் (அவை யிரண்டும் தனித்தனி வெவ்வேறு பொருள்களாயிருந்தால்) அடைபவனால் அடையப்படும் வஸ்துவானது அடையப்படும். பிரம்மமோ அடைபவனுடைய சொரூபமாகவே யிருத்தலின் அடையத் தகுந்த பொருளன்று.

**பிரம்மம் செவ்வை செய்யப்படத் தக்கதன்று:—** அழுக்கடைந்ததான கண்ணாடி முதலியவைகளுக்கே *சம்ஸ்காரம் (செவ்வை செய்தல்) அங்கீகரிக்கப்படுகின்றது. ஆகாயத்தைப்போல நிர்மலமாயுள்ள பிரம்மத்திற்குச் சம்ஸ்காரம் சம்பவியாது. உலகத்தில் அழுக்கடைந்த பதார்த்தத்தினிடத்துள்ள அழுக்கைப் போக்கச் சம்ஸ்காரம் செய்யப்படுகின்றது. பிரம்மம் மலினவஸ்துவன்றே. நிர்மலமானதன்றோ! ஆகலின் அதற்குச் சம்ஸ்காரம் வேண்டப்படுவதின்று. தவிர, ஓர் வஸ்துவிற்கு மற்றொரு வஸ்துவால் தோஷம் நேரிடின் அத்தோஷம் சம்ஸ்காரத்தால் போக்கப்படும். இம்முறைமையின்படி பிரம்மத்திற்குத் தோஷத்தையுண்டாக்கும் பொருள் ஒன்றிருக்குமாயின் அது பிரம்மத்திற்கு அன்னியமாய் வேறானதாயிருக்கவேண்டும். பிரம்மம் அத்துவிதமானது (இரண்டாவதற்றது); அதற்கு வேறாக மற்றொரு பொருளில்லை. மேலும் பிரம்மம் கிரியையற்றதாகலின் வேறொரு வஸ்துவுடன் சம்பந்தப்படத்தக்கதுமன்று. ஆகலின் பிரம்மம்தோஷமுடையதுமல்ல. சம்ஸ்காரம் வேண்டப்படுவதுமின்று.

அன்னிய வஸ்துவின் சம்பந்தத்தால் உண்டாகும் தோஷத்தை நிவர்த்தி செய்வதற்காக பிரமத்தினிடத்து சம்ஸ்காரம் வேண்டாவிடினும் தைலத்திற்குச் சுகந்தம் உண்டாக்குவதுபோல குணாதான (குணத்தின்) உற்பத்தி வடிவமான சம்ஸ்காரமாயினும் சம்பவியாதோ? எனின், ஒருகாலும் சம்பவியாது. ஏனெனின், ஓர் வஸ்துவிற்குக் குணத்தையுண்டாக்குதல் வேண்டுமாயின் அவ்வஸ்து குணத்தோடு கூடியதாயிருத்தல் வேண்டும். குணத்தோடு கூடிய வஸ்துவிற்கே மற்றொரு குணத்தைச் சம்பந்தப்படுத்தலாம். பிரம்மம் நிர்க்குணமானதென்று வேதம் கூறுகின்றது. ஆகலின் நிர்க்குணமான பிரம்மத்திற்கு, தைலத்திற்குச் சுவாசனை யூட்டுதல்போல வேறொரு குணத்தையுண்டாக்குதல் வடிவ சம்ஸ்காரம் சம்பவியாது.

**பிரம்மம் †விகாரப் படுவதன்று:—** ஒரு வஸ்து விகாரமடையத் தக்கதாயின் அது அவயவங்களோடு கூடியதாயும் பரிணாமம் (வேறு வடிவம்) அடைவதாயுமிருக்கவேண்டும். அதை விகாரப்படுத்துவதற்கு வேறொரு வஸ்து வேண்டும். பால் முதலான வஸ்துக்கள் மோர் முதலானவைகளால் தயிர் முதலான வடிவங்களாகப் பரிணமித்தல்போல. ஆனால் பிரம்மமோ நிரவயவமானதாயும் கிரியையில்லாததாயும் இரண்டாவதற்றதாயுமிருத்தலின் விகாரமடையதக்கதல்ல. ரூபமற்றது, கிரியையற்றது, அசைவற்றது, அசங்கமானது என்று.பிரம்மத்தின் உண்மை வடிவம் சுருதியுக்திகளால் நிர்ணயிக்கப்பட்டிருத்தலின் பிரம்மம் எவ்விதத்தினும் கர்மத்தால் அடையக்கூடியதன்றாம். ஏனெனின் கர்மத்தாலுண்டாம் பயன் அநித்தியமானதாயும் பிரம்மம் நித்தியமானதாயுமிருத்தலின் என்க.

---

*சம்ஸ்காரம்=மலத்தின் நிவிர்த்தி, குணத்தின் உற்பத்தி என இருவகை. இங்கு மலநிவர்த்தி.

†விகாரம்=முன் ரூபத்தை விட்டு வேறு ரூபத்தை அடைதல். இது பரிணாமம் எனவும் படும்.

புண்ணிய பாவங்களிரண்டும் கலந்ததாகிய மிசிர கர்மத்திஞல் உண்டாகிய தேகம் முதலாகிய இவ்வுலகப் பொருள்கள் எங்ஙனம் அழிந்துபோகின்றனவோ அங்ஙனமே புண்ணிய கர்மத்தாலுண்டாகும் சொர்க்கமும் நாசமடைகின்றது. 'எது கர்மத்தாலுண்டாகின்றதோ அது அநித்தியமான' தென்று சுருதி கூறுகின்றது. சொர்க்கமும் கர்மத்தாலுண்டாவதாகலின் அநித்தியமேயாமென்பது இதஞல் விளங்குகின்றது.

ஜெகத்திற்குக் காரணவஸ்து எதுவோ அது நித்தியமானதென்பது அனைவராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. ஜெகத் காரணமாயிருப்பது பிரம்மமேயென்று சுருதியானது அறுதியிட்டுக் கூறுதலின் அப்பிரம்மம் நித்தியமானதேயாகும். சுவர்க்கமும் அப்பரப் பிரம்மத்திஞலுண்டானதே. 'பிரம்மமொன்றே முக்காலத்துமுள்ளது' என்பது சுருதிவாக்கியம். இதஞல் பிரம்மத்திற்கே நித்தியத்துவம் சித்திக்கின்றது. (தொடரும்)

பூ. ஸ்ரீனிவாசன், சித்தூர்.





## யோகம்.

(20-ம் பக்கத் தொடர்ச்சி.)

### மஹா முத்திரை.

பத்து முத்திரைகளுள் மஹாமுத்திரை யென்பது, அப்பியசிப்பவனுக்குப் பஞ்ச கிலேசங்களையும், சோக மோகங்களையும் நீக்குதலாலும் மரணத்தை ஒழிப்பதாலும் இது மஹாமுத்திரையென்று கூறப்பட்டது. இது வெகு சிலாக்கியமானது. இதை அப்பியாசஞ் செய்யாதவன் குண்டலி என்னும் ஆதாரசக்தியை நித்திரையினின்றும் விழிக்கச்செய்யமாட்டான்.

காலை மடித்து இடதுகாற் குதியை யோனி ஸ்தானத்தில் அழுந்த வைத்து வலதுகாலை நீட்டிக்கொண்டு அந்தக் காலின் பெருவிரலைச் சுட்டுவிரலாற் பிடித்துக்கொள்ளவேண்டும். வாயுவைப் பூரிக்கவேண்டும். அப்போது பூரித்தவாயு இடதுபக்கத்தில் தங்கும். வலது குதியை யோனி ஸ்தானத்தில் அழுந்தவைத்துப் பெருவிரலைச் சுட்டுவிரலாற் பிடித்துக்கொள்ளவேண்டும். இதஞல் வாயு வலப்பக்கத்தில் நிற்கும். இம்முத்திரையை அனுஷ்டிப்பவர்களுக்குப் பத்தியா பத்தியமில்லை. எல்லாவற்றையும் புசிக்கலாம். எல்லாப் பதார்த்தங்களும் எளிதில் ஜீரணமாகும். இப்படி அப்பியசித்தபின் வாயுவை மெதுவாக வெளிவிடவேண்டும்; வேகமாய்விட்டால்

'லங்குறையும். இந்த அப்பியாசத்தால் க்ஷயம், குஷ்டம், குன்மம், மஹோதராமாதி ரோய்கள் நீங்கும். இந்த முத்திரையை இரகசியமாய் வைத்துக் கொள்ளவேண்டும். அநதிகாரிகளுக்குச் சொல்லக்கூடாது. இந்த முத்திரையின் இரகசியத்தைக் குருமுகமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த முத்திரையால் நித்திரையிலிருக்கின்ற ஆதாரசக்தி விழித்துக்கொண்டு தடியால் அடிபட்ட பாம்பு நிமிர்ந்து நிற்பதுபோல நிமிரும். இடைகலை பிங்கலைகளின் செய்கை ஒழியும். பிராணவாயு சுழுமுனைநாடியிற் பிரவேசிக்கும். சகல சித்திகளு முண்டாகும். இந்த முத்திரையில் மூலபந்தம் ஜிஹ்வாபந்தமாகிய இரண்டும் உபயோகப்படும்.

## மஹாபந்தம்.

இதை அப்பியாசித்த யோகி சகல சித்திகளையும் பெறுவான். எம பாசத்தை யெளிதில் விலக்கிக்கொள்வான். அமிர்தவாரியைப் பெறுவான். சிவன் வசிக்கும் புருவமத்தியில் மனதை நிறுத்துவான். ஆதலால் இதை முயற்சியுடன் அப்பியசிக்கவேண்டும்.

அனுஷ்டிக்கும் முறை இடதுபாதத்தின் குதியை யோனிஸ்தானத்தில் வைத்துக்கொண்டு வலது தொடையை இடது தொடையின்மேல் வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு வாயுவைப் பூரிக்கவேண்டும். பின் மோவாய்க் கட்டையை இருதயத்தில் நன்றாய் வைக்கவேண்டும். பின் யோனிஸ்தானத்தைச் சுருங்கச்செய்து மனதைப் புருவமத்தியில் நிறுத்தவேண்டும். வாயுவைப் பூரித்துக் கும்பகம் செய்யவேண்டும். பின் வாயுவை மெதுவாய் விடவேண்டும். இப்படி இடப்பக்கத்தில் செய்து பிறகு வலதுபக்கத்திலும் செய்ய வேண்டும். இதுவே மஹாபந்தமாம்.

## மஹா வேதம்.

மஹாபந்தத்திலிருந்து நிச்சலமான சித்தமுடையவன் ஜாலந்தர முத்திரையால் அசையாமல் நிறுத்திக் கும்பிக்கவேண்டும். ஜாலந்தர முத்திரை யென்பது கழுத்தைச் சுருக்குதலாகிய முத்திரையாம். பிறகு இரண்டு கைகளையும் பூமியில் சரியாய் ஊன்றிக்கொண்டு யோனிஸ்தானத்தில் இடது கா்குதியைச் செலுத்தி இருபக்கத்து இடுப்பையும் மேலெழுப்பி மெதுவாய்ப் பூமியில் தட்டவேண்டும். இப்படிச் செய்வதால் பிராணவாயு இடைகலை பிங்கலை நாடிகளைவிட்டுச் சுழுமுனைநாடியிற் பிரவேசிக்கும். அதுவே மோட்சமார்க்கமாதலால் நரைதிரை மூப்புகள் ஒழியும். மரணபயம் சேராது. சகல சித்திகளும் உண்டாகும். ஆகையால், இது சர்வ சிலாக்கியமானது. மஹாமுத்திரை மஹாபந்தம் மஹாவேதம் இம்மூன்றையும் நாள்தோறும் செய்யவேண்டும். ஜாமத்துக்கொருதரமாக எட்டுத்தரம் செய்யவேண்டும். குரு உபதேச முறை தவறாமல் செய்யவேண்டும். இதனால் பாபங்களெல்லாம் ஒழியும். புண்ணியம் வளரும். இம்முத்திரைகள் யோகிகளால் மிகவும் இரகசியமாகக் காப்பாற்றப்படுகின்றன. இவைகளை அனுஷ்டித்தே பூர்வ காலத்து ரிஷீசுவரர் நரை திரை மூப்பு மாரணங்களை அடையாமல் நெடுங்

காலம் (பலயுகம்) வாழ்ந்து வந்தார்கள். இவைகளை அப்பியாசிக்கிறவன் வெகு இரகசியமாய் வைத்திருக்கவேண்டும். அநதிகாரிகளுக்கு வெளியிடக் கூடாது.

## கேசரி.

நாவைப் பாலத்துவாரத்திலிட்டுப் பார்வையைப் புருவமத்தியில் செலுத்துதலே கேசரியாம். கேசரி என்பது ஆகாயம். அதற்குச் செல்லும் மார்க்கத்தைத் தொடுதல் கேசரி என்பதாம். இதற்கு மிகுந்த பிரயாசத் துடன் முயற்சி செய்தாலன்றி இது சித்தியாகாது. சாலனம், தோகனம், சேதனம் என்னும் தொழில் முயற்சியால் நாவை நீளச் செய்யவேண்டும். இவை கடினப் பிரயாசத்தாலாகவேண்டுவன.

சாலனமாவது—சுட்டுவிரல் பெருவிரல் இரண்டினாலும் நாவைப்பிடித் துக்கொண்டு இடம் வலமாகச் சுழற்றுதலாம். இங்ஙனம் செய்தலால் நாக்குச் சிறிது நீண்டு வசப்படும்.

தோகனம் என்பது—பசுக்கறத்தல்போல பெருவிரல் சுட்டுவிரல்களால் நாவை உருவி இழுத்தலாம். இவை யிரண்டும் முறையே ஒன்றின்பின் ஒன் ருகச்செய்து பழகவேண்டும். இப்படிப் பழக்கம் செய்யாவிட்டால் கேசரி சித்தியாது. அதன்பின் முறையே சேதனம் செய்யவேண்டும்.

சேதனமென்பது—அறுத்தல். அதாவது மிகவும் கூர்மையான கத்தி யால் நாக்கின்கீழ் அடியில் உள்ள நரம்பை அறுத்தலாம். முதல்நாள் ஒருமயிர் அளவு சேதிக்கவேண்டும். அப்படி அறுத்த இடத்தை உப்பு கடுக்காய்த்தூள் களைக்கொண்டு நன்ருய்த் தேய்க்கவேண்டும். இந்தப் பொடியால் ஏழுநாள் வரைக்கும் தேய்க்கவேண்டும். ஏழுநாட்களானபின் எட்டாவதுநாள் மறுபடி யும் ஒரு மயிரளவு சேதிக்கவேண்டும். சேதித்தபின் முன்சொன்ன பொடி யால் தேய்க்கவேண்டும். முன்போல ஏழுநாள் தேய்க்கவேண்டும். இப்படி ஆறுமாதகாலபரியந்தம் செய்யவேண்டும். அப்போது நாவானது அடிநரம் புக் கட்டறுபட்டுக் கபாலகுஹத்தை அடையும் தன்மையை அடையும்.

அதன்பின் நாவை உட்புறமாகத்திருப்பி, இடைகலை பிங்கலை சுழுமுனை யென்னும் மூன்று நாடிகளின் மார்க்கத்தில் நன்ருய் வைக்கவேண்டும். இதனையே கேசரி முத்திரையென்று நூல்கள் புகழ்ந்து கூறுகின்றன. ஏனெனில் இம்முத்திரை அமிர்தபானம் செய்வதற்குச் சாதனமாதலால், இந்த முத்திரையால் மூப்பு மரணம் ஒழியும். பசிதாகம் நித்திரைகளும் நீங் கும். மூர்ச்சையாதி சோகமயக்கங்களும் உண்டாகாவாம். எமனும் அணுக மாட்டான். சுர முதலிய ரோகங்களும் அணுகா. கர்மபந்தமும் இல்லை. சம்போகத்தால் விந்துவும் ஸ்கலிதமாகாது. நழுவிவிழுந்தாலும் மேலே ஏறி விந்துஸ்தானத்தை அடையும்படி செய்துகொள்ளலாம். சோசத்தைச் சுருக் குதலாகிய முத்திரையால் ஆக்ருஷிக்கலாம். சோசத்தைச் சுருக்குதலுக்கு வஜ்ரோலி முத்திரையென்று கூறுவர் அறிஞர். யோகி கபாலமார்க்கத்தில் நாவைச் செலுத்தி அசைவற்ற மனமுடையவனுயிருந்தால், புருவத்தின்

இடதுபக்கமாகிய சந்திரகலையினின்றும் அமிர்தம் உருகிப் பெருகி ஒழுகும். அதைக்குடிப்பதே அமிர்தபானம் என்பர் அறிஞர். சோமபானமென்றும் இதற்குப் பேர். இதை அமரவாருணி யென்று நூல்கள் கூறும். இந்த அமிர்தபானமே யோகத்தால் பெறும்பேறும். இதனால் மரணத்தை வெல்லலாம். எதிரியால் எறியப்படும் ஆயுதங்களை விலக்கலாம். வியாதியில்லாமல் நெடுங்காலம் ஜீவிக்கலாம். அந்தக் கபாலத் துவாரத்தினின்றும் சந்திராமிர்தம் ஒழுகிச் சரீரத்திலுள்ள அக்கினி மண்டலத்தில் சேர்ந்து வியர்த்தமாகின்றது. கேசரி முத்திரையால் அமிர்தம் ஒழுகாமல் தடுக்கப் படுதலால் இதனைச் செய்பவனுக்கு மரணமே யில்லையாமென்று நூல்கள் கூறுகின்றன. இந்த யோகியால் அடையப்படாதது ஒன்றுமில்லை. இவன் தனக்கு இஷ்டமான காலபரியந்தம் உலகத்தில் விளையாடிப் பின் கற்பாந்தத்தில் சாயுஜ்ய பதவியையும் அடைவான்.

உட்டியான பந்தமுத்திரை—உட்டியானமென்பது பறத்தல் என்று பொருள் தரும். அதாவது பிராணவாயு இடைகலை பிங்கலைகளை யடையாமல் சுழுமுனைநாடியின் மார்க்கமாக மேலே பறந்து செல்லுதலைச் செய்யும் முத்திரையாம். நாபியின் மேற்பாகத்தையும் கீழ்ப்பாகத்தையும் முதுகுடன் ஒட்டுமாறு செய்வதுதான் உட்டியானபந்தம். இதைக் குரு முகத்தால் நன்குணர்ந்து செய்யவேண்டும். ஆறுமாசகாலம் அப்பியாசம் பண்ணினால் இந்த முத்திரை சித்திக்கும். சித்தித்தால் மரணத்தை ஜயிக்கலாம். கிழவனானவனும் யௌவனனா யிருக்கலாம். இந்த உட்டியானபந்தத்தால் பிராணன் முக்திமார்க்கமாகிய சுழுமுனையிற் பறந்து செல்லுதலால் அவன் முத்தி அடைந்தவனே. ஆதலால் முத்திரைகள் எல்லாவற்றிலும் இந்த உட்டியான பந்த முத்திரை மிகவும் சிறந்ததென்று யோகிகளும் சித்தர்களும் கூறுகிறார்கள்.

மூலபந்தம்—இரண்டு குதிக்கால்களால் குதஸ்தானத்தைச் சுருங்கும்படி அழுத்திக்கொண்டு மூலத்தை மேலேறும்படி செய்யவேண்டும். இதனால் பிராணவாயுவும் அபானவாயுவும் ஒன்றுபட்டுச் சேரும். சேர்ந்து சுழு முனையில் செல்லும். அப்போது நாதம் தோன்றும். இம்மூன்றும் சேர்ந்து இதயத்தைக் கடந்து சென்று விந்துவுடன் கலந்து பிரமரந்திரத்திற் பிரவேசிக்கும். இதுவே யோகசித்தியாம் என்பர் மேலோர். இதனால் அபானன் மேல் நோக்கிச் சென்று அக்கினிமண்டலத்தை அடையும். பின் அபானனும் அக்கினியும் பிராணனை யடையும். அப்போது பிராணவாயுவுடன் கூடின அக்கினி கொழுந்துவிட்டெரியும். அப்படி யெரியும் அக்கினியின் வெப்பத்தால் குண்டலிசத்தி நித்திரையைவிட்டு எழுந்திருந்து அவற்றுடன்கூடிச் சுழுமுனையிற் செல்லும். சத்தி பிராணன் நாதம் அக்கினி மனம் இவை ஒன்று சேர்ந்து பிரமரந்திரமாகிய அமிர்தமார்க்கத்தை அடைதலால் மரணமில்லாமல் எத்தனை யுகங்களாயினும் ஜீவித்திருக்கலாம். நிஷ்டைகூடியிருக்கலாம். இதுவே யோகசித்தியாம். ஆதலால் மூலபந்தம் எப்போதும் செய்யவேண்டும்.

(தொடரும்.) சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

உ

சிவமயம்




## எறிபத்தநாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

(29-ம் பக்கத் தொடர்ச்சி.)

### அன்பு.

அன்பாவது அருட்கு முதலாகி மனத்தில் நிகழும் நேயம். அதுவே ஒருவர்க்கு இம்மைப்பயனையும் மறுமைப்பயனையுந் தருவது. அதுபற்றியன்றோ ஒருவர்க்கு அரிதினும் அரிதான மானுடதேகத்தோடு உண்டாகிய சம்பந்தத்தை, அன்போடு பொருந்துவதற்கு வந்த வழியின் பயனென்று அறிந்தோர் சொல்லுகின்றார்கள்.

அன்பானது தன்னையுடையவர்க்கு, அவரோடு தொடர்புடையார் மாட்டு விருப்பத்தைத்தந்து, அதன்வழியே பிறர்மாட்டு விருப்பமுடைமையையுந்தரும். அவ்விருப்பமுடைமைதான் ஒருவர்க்குப் பகையும் நொதுமலுமின்றி யாவரும் நட்பாகும் சிறப்பினைத்தருவது. அறவோர்க்களித்தல், அந்தணரோம்பல், துறவோர்க்கெதிர்தல், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர்கோடல் முதலிய கிரகத்த தருமங்களுக்குக் காரணம் அன்பேயாகும்.

> " துறவற மனை யறஞ்சீர் தூய்மைநற் கல்வி நல்லோர்
> உறவொடு மகங்க டான மொண்டவம் விரதம் பூசை
> அறிவிவை யனைத்து மில்லை யாதர வில்லை யாயின் " (பிரபுலிங்கலீலை)

> " அன்பே யென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
> அன்பேயன் பாக வறிவழியம்—அன்பன்றித்
> தீர்த்தந்தி யானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
> சாற்றும் பழமன்றே தான் " (திருக்களிற்றுப்படியார்-55)

என்பன இவ்வன்பின் தன்மையை விளக்கும்.

அன்பில்லார் யாவரும் பிறர்க்குப் பயன்படாமையால், எல்லாப் பொருள்களாலுந் தமக்கே யுரியராவார். அன்புடையாரோ அப்பொருள்களாலே மாத்திரமல்லாமல் தம்முடம்பாலும், எலும்பாலும் பிறர்க்குரியராவார். அதற்கு, சிபிச்சக்கிரவர்த்தி " தன்னகம் புக்க குறுநடைப்புறவின் றபுதிகண்டஞ்சித் துலைபுக்" கதும் விருத்திராசுரனை வெல்லும் பொருட்டு யாசித்த இந்திரனுக்குத் ததீசிமாமுனிவர் தமது முதுகெலும்பைத் தந்ததும், கன்னன் தனது மரணத்தைக் கருதாது தன்னுடன் பிறந்துள்ள கவசகுண்டலங்களை அந்தண வடிவங்கொண்டு வந்துயாசித்த இந்திரனுக்குக் கொடுத்ததும் சான்றாகும்.

அன்பில்லையேல் ஒருவர்க்கு இடம் பொருள் ஏவல் செய்வார் முதலிய உறுப்பெல்லாம் என்ன பயனைத்தரும்? அன்பானது உள்ள நெகிழ்ச்சியாகையால் அது எப்பொழுதும் யாவர்க்கும் புலனாவதின்றாம். ஆனால் அது முதிர்ந்த வழியும், அன்புடையார்க்கு, தம்மால் அன்பு செய்யப்பட்டவ

ருடைய துன்பங் கண்டபோதும் பொழிகின்ற கண்ணீரே அவ்வன்பை யெல்லோரும் அறியும்படி செய்யும். இத்தகைய அன்பு ஒருவர்க் கில்லை யேல், அவரை அறக்கடவுள், புழுமுதலான என்பில்லாத பிராணிகளின் உடம்பை வெயிலானது தகித்து வருத்துவதுபோலத் தகித்து வருத்தும்.

அன்பை முதலாகக்கொண்டு அதன் வழியாக நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பெனப்படும். அல்லாதார்க்குளவான உடம்புகள் உயிர்நின்ற வுடம்புகளாகாமல் என்பினைத் தோலாற் போர்த்தனவாம்; எனவே நடைப் பிணங்க ளெனப்படு மென்க.

அன்பானது, தலையன்பு, இடையன்பு, கடையன்பு என மூவகைப்படும். தலையன்பாவது ஒருவன், தன்னுலன்பு பாராட்டப் பட்டாரது பெயரைக் கேட்டமாத்திரையே தன்வசமழிதல். இடையன்பாவது அவரைக்கண்ட வுடன் தன்வசமழிதல். கடையன்பாவது அவரைப் பரிசித்தபோது தன் வச மழிதல்.

கடவுள் ஆன்மாக்கள் மாட்டுக் கொண்ட அன்பும், ஒருவர் தமக்கு இவை தொடர்புடையவை இவை தொடர்பில்லாதவை என்று நோக்காது இயல் பாகவே எல்லாவுயிர்கள் மேலும் பிரதிபலன் கருதாது கொண்ட அன்பும் அருளெனப்படும். அருள், இரக்கம், கருணை, கிருபை யென்பன ஒரு பொருட் கிளவிகள்.

உலக வின்பத்துக்குக் காரணம் பொருளேயாதல் போல மோட்சவின் பத்துக்குக்காரணம் அருளேயாம். "எவ்வுயிரும் பராபரன் சன்னிதியதாகும், இலங்கு முயிருட லனைத்து மீசன்கோயில்" என்றபடி உயிர்களெல்லாங் கட வுளுக்குத் திருமேனிகள். அவ்வுயிர்களுக்கு நிலைக்களமாகிய வுடம்புகளெல் லாம் கடவுளுக்கு ஆலயங்கள். ஆதலால் கடவுளிடத்து மெய்யன்புடையவர் கள் அக்கடவுளோடு உயிர்களுக்கு உளதாகிய தொடர்புபற்றி அவ்வுயிர்க ளிடத்தும் அன்புடையவர்களேயாவர்கள். உயிர்களிடத் தன்பில்லாத பொழுது கடவுளிடத்து அன்புடையவர்போல் ஒழுகுவது நாடகமாத்தி ரையேயன்றி உண்மையன்றென்பது தெளிவாய் உணரப்படும்.

பிறவுயிர்களிடத்து இரக்கமில்லாதவர் தம் முயிருக்கு உறுதி செய்து கொள்ளமாட்டார். ஆதலால் அவர் இரக்கமில்லாதிருப்பது பிறவுயிர்க ளிடத்துமாத்திரமா? தம்முயிரிடத்தும் இரக்கமில்லாதவரேயாவர். அவர் தமக்குத் தாமே வஞ்சகர்.

அருளென்னுங் குணம் யாவரிடத்திருக்குமோ அவரிடத்தே பழி பாவங்களெல்லாஞ் சிறிதும் அணுகாது நீங்கிவிடும். மரணபரியந்தம் தன் னுயிரை வருந்திப் பாதுகாத்தல்போலப் பிறவுயிர்களையும் வருந்திப் பாது காப்பவன் எவனோ அவனே உயிர்களுக்கெல்லாம் இதஞ்செய்பவனாகித் தான் இன்பமே வடிவமாக இருப்பன்.

மேலும் சிவபெருமான் கண்ணப்பநாயனருக்கு ஆறுநாளில் முத்தி கொடுத்தருளியதும், சேந்தனார் நிவேதித்த களியை யுண்டருளியதும் அன் பின் செயலாலன்றோ? ஆகையால் பிறவிப்பயனை விரும்பிய ஒவ்வொருவரும் இறைவன்மாட்டு அன்புடையவராயிருத்தல் வேண்டும். அங்ஙனம் இறைவன் மாட்டுச் செய்யப்படும் அன்பு பத்தி யெனப்படும்.

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.

---




## சந்தனாதித் தைலம்.

(22-ம் பக்கத் தொடர்ச்சி.)

எந்தச் சிறு கைத்தொழிலானாலும், நீராவியாலும், மின்சாரத்தாலும் ஓடக்கூடிய இயந்திரம் முதல் கையினாலாகும் சிறு கருவிவரையிலுமுள்ள எத்தொழிலுக்கும் ரசாயன ஞானம் வேண்டுவது அவசியம். கற்றவன் ரசாயனத்தின் உதவியைப் போற்றுகின்றான். கல்வியில்லாத கிராமவாசி ரசாயனமென்ற சொல்லை அறியாமலே வழக்கமாக எத்தொழிலையும் செய்து வருகின்றான்.

நிற்க, சந்தனாதித்தைலம் இறக்குந்தொழிலைக் குடிசைக் கைத்தொழிலாக அனுசரிக்கக் கீழ்க்கண்ட விவரம் அனுகூலமானது. சந்தனாதித்தைலம் செய்வதும் மிகவும் சுலபமான தொழிலேயாம். சந்தனமரத் துண்டுகளினின்றும் எளிதில் தைலமிறக்கலாம். அம்மரத்தின் வேரிலிருந்து அதிகமான தைலத்தை வடிக்கலாம். சிறு தோட்டங்களிலும் வீடுகளின் பின்புறத்திலும் சந்தனமரங்கள் நன்கு வளருந்தன்மையன. தமிழ்நாட்டில் 120 பலங்கொண்ட ஒரு வீசை நிறையுள்ள சந்தனக்கட்டை ரூ. 1-8-0 வீதம் விற்கப்படுகின்றது. தொழிலாளர் முதல் முதலாகச் சந்தனமரத்தை ரம்பங்கொண்டு வகுத்து அதனாலுண்டாகும் தூள்களை நீக்கிப் பின்பு அறுத்த கட்டைகளைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டுகின்றார்கள். மைசூரிலுள்ள தொழிலாளிகள் ஷைகட்டைகளை 12-அங்குல நீளமும், 4-அங்குல அகலமும், 1-அங்குல பருமனுமுள்ள துண்டுகளாக வகுக்கின்றார்கள்; இவற்றை இரும்பு உருளைகளிற் கொடுத்து அரைத்துக் கூழ்போலாக்குவர். இந்த உருளைகள் 6-அங்குலக் குறுக்களவும் 8-அங்குல நீளமுமுள்ளவை. இவை சாய்வாயும் ஒன்றுக்கொன்று சமீபித்தும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின் முனைகள் பூமியிற் பொருந்தி ஆங்கிருந்து நீளமான ஓர் தடியுடன் வெளியேற, அத்தடிகள் மாடுகளாலிழுக்கப்பட்டு, உருளைகள் சுற்றுகின்றன. ஓர் குழாயானது அவ்வுருளைகளுக்கு மேலிடத்தில் தண்ணீர் சொரிந்துகொண்டிருக்கின்றது. இவ்விதம் அரைக்கப்பட்ட சந்தனம் அவ்வுருளைகளுக்கடியில் அமைந்துள்ள பாத்திரத்தில் விழுந்து மற்றோரிடத்தில் சேகரித்து வைக்கப்படுகின்றது. இந்தக் கந்தத்தை எந்தச் சந்தன அரைவைச்சாலையினின்றும் சொற்பக்காசு கொடுத்துப் பெறலாம். கிராமங்களில் ஸ்திரீகள் கல்லினுதவியாலேயே சந்தனத்தை அரைத்து விற்கின்றார்கள்.

இவ்வாறான சந்தனம் தண்ணீர் சேர்த்து நன்றாகக்கலந்து பளுவான பாத்திரத்திலிட்டுக் காய்ச்சப்படும்போது அக்கலவையினின்று எண்ணெய் கொஞ்சங் கொஞ்சமாகத் தென்படும். அக்கலவையைத் திரும்பவும் மற்றொரு ஏனத்திலிட்டுக் காய்ச்சத் தைலம் அதிகமாக மேல் நிற்கும். அதை வழித்து எடுத்துவிடவேண்டும். அவ்விதம் வழித்தெடுத்ததை வேறொரு பாத்திரத்திலிட்டு இரண்டு மூன்றுமுறை காய்ச்சத் தைலம் சுத்தப்பட்டுப் பொன்னிற முடைத்தாகின்றது.

வடிகட்டும் முறை வருமாறு:—இரண்டு மூன்றடி குறுக்களவுள்ளதும் குறுகிய வட்டமான வாயுள்ளதுமான ஓர் மண்பானையை உபயோகிக்கவேண்டும்.

அப்பானையில் சந்தனக்கட்டையின் சிறு துண்டுகளையிட்டு நீரால் நிரப்பிக் களிமண்ணால் அதன் வாயை மூடவேண்டும். செம்பினாற் செய்யப்பட்ட நீர் நிறைந்த மற்றொரு பாத்திரத்திலிருந்து தண்ணீர் வந்துகொண்டிருக்க, களி மண்ணால் பானையில் வாயை மூடியிருக்குமிடத்திலிருந்து ஓர் சிறு குழாய் அவ்விரு பாத்திரங்களிலும் சம்பந்தப்பட்டிருக்கும். இது ஓர் கொள் கலம். பூமியில் ஓர் சிறுகுழிவெட்டி விறகிட்டுப் பானையைக் காய்ச்சவேண்டும். இவ் விதம் செம்புக்கொள்கலத்திலுள்ள தண்ணீர் பூராவும் நீராவியாக மாறும் வரையில் 8-முதல் 10-நாட்கள் வரை காய்ச்சித் தைலமெடுக்கப்படுகிறது.

ஒரு மணங்கு சந்தனக்கட்டைக்கு நூற்றுக்கு 3½-வீதம் அதாவது 12 அவுன்ஸ் (Ozs) தைல மிறக்கலாம். இவ்விதம் எடுக்கப்படும் தைலம் தெளிவாகவும் மங்கலான மஞ்சள்நிற முள்ளதாயு மிருக்கும்; குங்கிலிய ருசி யும் இன்பமான ஒருவித மணமும் கூடியதாகவு மிருக்கும். இந்தச் சுத்தமான 1-பவுண் (℔) நிறையுள்ள தைலத்தை 24-ரூபாய் வீதம் விற்றால் ஷை பவுண் ஒன்றுக்கு 4-ரூ. இலாபம் கிடைக்குமென்பது சாதாரணத் தொழிலாளியின் அனுமானம். உபயோகம்:—விவாக முதலான சுபங்களுக்கும், வாசனையைக் கருதி உபயோகிப்பாருக்கும் இது பரிமளகந்த முடையதாக இருக்கின்றது. இத்தைலத்தில் வாசனை நீடித்திருக்க ரோஜா மொட்டுகளைச் சேர்ப்பதுண்டு. கூந்தல் வளர்ச்சிக்காகவும், கண் குளிர்ச்சிக்காகவும் இதை அவசியம் உப யோகிக்கலாம். வைத்திய நிபுணர்கள் இதன் உபயோகத்தைப் பெரிதும் அனுபவத்திலறிந்து வருகின்றார்கள். 'கொணர்ரியா' (Gonorrhea) என்ற வியாதிக்கும் சொறி சிரங்குகளுக்கும் இது கைகண்ட மருந்து. (இண்டஸ்டிரி)

## காகித உற்பத்தி.

இந்தியாவில் வங்காளத்தில் மூன்று, பம்பாய் மாகாணத்தில் மூன்று, பர்மாவில் ஒன்று, மத்தியமாகாணத்தில் ஒன்று, சென்னையில் ஒன்று ஆக ஒன்பது காகித யந்திரசாலைகளிருக்கின்றன. இந்த ஒன்பது தொழிற்சாலை களிலும் 6,000 கூலிகள் வரை வேலைசெய்து வருகிறார்கள். 1922-23-ம் வருட அறிக்கைப்படி மேற்கூறிய சாலைகளில் 1,206,932 (Cwts) அளவுள்ள 2,78,66,735-ரூபாய் பெறுமானமுள்ள அட்டை காகிதங்களை 24,25,837 ரூபாய் மதிப்புள்ள 180,225 (Cwts) காகிதம் செய்யத் தேவையான சரக்குகளைக்கொண்டு உற்பத்தி செய்திருக்கிறார்கள். மேற்சொன்ன இலக் கங்களால் உற்பத்திக்கும் செலவிற்குமுள்ள தாரதம்மியம் நன்கு விளங்கும். மற்றும் 1922 23-ல் 17,205 ரூபாய் விலையுள்ள 606 (Cwts) காகிதம் அட்டை முதலியனவும் ரூ. 1,251 பெறுமானமுள்ள 190 (Cwts) எடையுள்ள இயந் திரசாமான்களும இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. சரியான ஆதாரமுள்ள கணக்குகள் கிடைக்காத ஆண்டுகளுக்கு, வருடவாரி சராசரி உற்பத்தியின் விவரம் வருமாறு:—

| வருடம். | டன். |
| --- | --- |
| 1909—14 | 31,000 |
| 1915—19 | 25,000 |
| 1920—24 | 32,000 |

தவிர ஒவ்வொரு வருடமும் 90,000-டன் காகிதங்கள் இந்தியாவின் தேவையென்றும் பெரியார் கணக்கெடுத்திருக்கிறார்கள்.

S. V. வரதராஜய்யங்கார், சரஸ்வதி நிலையம், உறையூர்.




(12-ம் தொகுதி 567-ம் பக்கத் தொடர்ச்சி.)

## சௌசம்.

சௌசம் என்பது யாதெனில், காலையில் அதாவது $4\frac{1}{2}$-மணியிலிருந்து 5-மணிக்குள் நித்திரையினின்று விழித்தவுடன் எழுந்திருந்து, ஜல ஸ்பரிசத்துக்குப் போகும்போது அதாவது சிறு நீர் கழிக்கச் செல்லுங் காலத்தில் பகவானைத் தியானம்செய்துவிட்டு, நீர் கழித்தவுடன், சுத்த ஜலத்தால் நீர் இறங்கிய லிங்கமாகிய ஆண்குறியைச் சுத்திசெய்தல். அப்படிச் சுத்தம் செய்யும் காலத்தில் மனதின்கண் ஜெபிக்கவேண்டிய மந்திரம் யாதெனில், "ஜலரூபமாய் விளங்காநின்ற பரிபூரணக் கடவுளாகிய நீர், என்னுடைய லிங்கத்தில்பட்ட சிறு நீரின் விஷத்தைப் போக்குவதுமன்றி, என் வீணைதண்டின் வழியே சென்று, நித்திரையினால் என் சிரசின்கண் அதாவது மூளையின்கண் ஏற்பட்டுள்ள சகல உஷ்ணங்களையும் மாற்றி, என் மனதையும் என்னையும் பரிசுத்தனாக்கக் கடவாய்'' என்பதே. இதனை ஒவ்வொரு ஸ்திரீ புருஷர்களும் செய்தல் அவசியமாம். இதுவே சௌசம் என்று கூறப்படுவது.

இத்தகைய சௌசத்தைக் கையாள்பவர்களுக்குச் சகலவித மூத்திரரோகங்களும் நிவர்த்தியாய்விடுகின்றது. தவிரவும் நீர் அடைப்பு, வெள்ளை, கொறுக்கு, அரையாப்பு, யோனிப்புற்று முதலான வியாதிகளும் நிவர்த்தியாகும். மேற்கூறியபடி செய்வதால் லிங்கத்தின் முனையில் படும் குளிர்ந்த ஜலமானது வீணை தண்டின் வழியாய்ச் சென்று அதனைக் குளிர்ச்சிசெய்து, சிரசில், சில் என்ற ஓர் உணர்ச்சியை யுண்டாக்கி மூளையில் உள்ள சகல உஷ்ணங்களையும் தணித்து மனத்துக்குச் சாந்தத்தையும் புத்திக்குச் சுறுசுறுப்பையும் தந்துவிடுகின்றது.

மேல்நாடுகளில் ஒன்றாகிய ஜெர்மன் தேசத்தில் சில வருஷங்களுக்கு முன் அவதரித்த (லூவிஸ் கூனி) என்னும் ஒரு பிரபல வைத்தியரால் கண்டுபிடிக்கப்பட்ட (சைன்ஸ் ஆப் ஈலிங்) என்னும் ஜல சிகிச்சை வைத்திய புஸ்தகத்தில் அவர், சகல வியாதிகளுக்கும் ஔடதப் பிரயோகமில்லாமல் செய்யும் பல சிகிச்சைகளைச் சொல்லியிருக்கிறார். சகலவித நீர் வியாதிகளுக்கும் அதாவது வெள்ளை, கொறுக்கு, யோனிப்புற்று, நீர்ப்பை வீக்கம், நீர்ப்பை இரணம், மதுமேகம், மேகம், ராஜப்பிளவைகள், பித்த உஷ்ணங்களால் ஏற்படும் கோபதாபங்கள், புத்திமந்தம், சோம்பல், கைகால் ஓய்ச்சல், கீல் வாய்வு முதலிய பல நோய்களுக்கும் அவர் சொல்லியிருக்கும் சிகிச்சையாவது :—

"ஒரு சிறிய புது மட்பாண்டத்தில், கிணற்று நீரையாவது அல்லது ஆற்று நீரையாவது நித்திரைக்குப் போகும்போதாகிலும் அல்லது முந்தியேயாகி

லும் விட்டு மூடிவைத்து மறுநாள் காலையில் நித்திரையினின்று எழுந்தவுடன், நீர்கழித்து மற்றெப் பாகங்களிலும் நீர் படாமல், லிங்கமாகிய ஆண்குறியை மேற்சொல்லிய மட்பாண்டத்தில் வைத்திருக்கும் ஜலத்தில் முழுகவிட்டு, லிங்கத்தின் நுனிப்பாகத்தை விரன், அல்லது முரட்டுத் துணிகொண்டு, ஆள்காட்டி விரல் நடுவிரல் ஆகிய இவ்விரண்டு விரல்களால் சுமார் 20 நிமிஷம் வரை லேசாகத் தேய்த்துவரவேண்டும்; இப்படிச் சில நாட்கள் செய்துவந்தால் மேற்சொல்லிய வியாதிகள் யாவும் நீங்கிவிடும்'' என்பதே.

இதன்படி அநேகர் குணமடைந்திருக்கின்றார்கள். இத்தகைய சிகிச்சையானது நம் தேசத்தில் இப்போது புதுச் சிகிச்சையெனவும், ஜெர்மனியரால் முதலாவதாகக் கண்டுபிடிக்கப்பட்டதெனவும் பலர் நினைக்கின்றார்கள். அது தவறானது. நம் தேசத்தில் சர்வ சாதாரணமாய் யாவராலும் சதாகாலமும் அநுஷ்டித்துவரப்படுகின்ற சௌசம் என்னும் முறையைவிட அது பதின் மடங்கு தாழ்ந்ததென்றே கூறலாம். ஏனெனில், (லூவிஸ் கூனிஸ்) சிகிச்சையாகிய குளிர்ந்தஜலத்தில் லிங்கத்தை நனைத்துத் தேய்த்தலாகிய சிகிச்சையில், லிங்கத்தில்படும் ஜலமானது மனோபலத்துடன் வீணா தண்டின்வழியே சென்று மூளையைப் பரிசுத்தம் செய்ய மனோசக்தியை உபயோகிக்கும் வழி சொல்லப்படவில்லை. ஆதலின், நம் நாட்டுச் சௌசத்தைக்காட்டிலும் இது தாழ்ந்தமார்க்கமே என்று சொல்வது மிகப் பொருத்தமாகும். சௌசத்தில், மனதும், புத்தியும், சித்தமும் ஜபித்தலாகிய கிரியையால் ஜலத்துடன் கலந்து அவ்வவ்வவயவங்களிலுள்ள தோஷங்களை நிவர்த்திசெய்வதால் (இப்னோடிசம், மெஸ்மரிஸம்) என்னும் சிகிச்சையும் கலந்திருக்கிறது. இதனாலேயே சௌசம் விசேஷமுள்ளதாம். இனி ஆசமன்னியம், ஸ்நாநம், பிராணாயாமம் என்பவற்றின் விவரம் அடுத்த சஞ்சிகையில் வெளிவரும். ஆனால் இவைகளை விரிவாக எழுதும்படி நண்பர்கள் விரும்பக்கூடும். அப்படி விரிவாக எழுதினால் இவை முடிய அதிக நாள் செல்லும். ஏனெனில், நமது ஆனந்தபோதினி பல விஷயங்களும் வெளிவரக்கூடியதாயிருப்பதால் என் ஒரு வியாசத்தையே அதிகமாகப் போட இடங்கிடைக்காமல் இவை சிறிது சிறிதாக வெளிவருதல் கூடும். ஆதலால் முக்கியமாகப் பிராணாயாமம் ஒன்றைமாத்திரம் விரிவாகப்படத்துடன் சகலரும் அநுஷ்டிக்கும்படியானமாதிரியில் எழுதி மற்றவைகளைச் சுருக்கி எழுத நினைக்கின்றேன். பலர் பிரியத்தை அநுசரித்து நான் இவற்றை எழுதச் சித்தமாயிருப்பதால் இவற்றின் விஷயத்தில் நண்பர்களின் அபிப்பிராயத்தை வெளியிடுமாறு கேட்டுக்கொள்கிறேன். இவ்வியாசங்களைப் பின்னர் புஸ்தகரூபமாக வெளியிடச் சிலர் முயன்று வருகின்றனராதலின் இவற்றை வேறு பத்திரிகைக்காரர்கள் பிரசுரிக்கலாகாது என்னும் விவரத்தையும் அன்னார்க்குத் தெரிவித்துகொள்ளுகிறேன்.

(தொடரும்) டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.

---

# வாந்திபேதிக்குச் சிகிச்சை.

விஷபேதியானது அசுத்தக் காற்றினாலும் விஷ ஜலத்தாலும், ஈக்களாலும் உண்டாகின்றன. இவற்றுள் கூடியவரையில் மேற் சொன்னவைகளால் உண்டாகும் விஷபேதியைத் தடுக்கத் தற்காலத்தில் சுண்ணும்பைத் தெளித்தல், பினைல் ஊற்றல் ஆகிய இவைகளையே மேல்நாட்டு வைத்தியர்கள் கண்டு பிடித்துக் கையாண்டு வருகின்றார்கள். ஆனால் இவற்றைவிட மேலானவைகளும் யாவராலும் குறைந்த செலவில் செய்துகொள்ளக் கூடியவைகளுமான சில விஷயங்களை இங்குக் கூறுவோம்.

விஷபேதி பரவின காலங்களில் ஒவ்வொரு வீட்டிலும் சுத்தமான காற்றை யுட்கொள்ள வீட்டின் பலபாகங்களில் வேப்பிலைக்கொத்துகளை வைத்திருக்கவேண்டும்; (நாள்தோறும் புதிய வேப்பிலைகளை வைத்தல் வேண்டும்.) மஞ்சளை அரைத்து ஜலத்தில் கலக்கி வீடு பூராவும் தெளித்தல் வேண்டும். ஈக்கள் வீட்டில் சேராவண்ணம் அசுத்தபதார்த்தங்கள், காபி, சர்க்கரை, முதலான வஸ்துக்களைப் பூமியில் கொட்டாதிருத்தல் வேண்டும். கழுநீர் ஜலம்வைக்கும் பாத்திரத்தைத தொலைதூரத்தில் வைத்தல்வேண்டும்; சாக்கடை முதலான இடங்களில் சுண்ணும்பைப் போடுதல் வேண்டும். இத்தகைய காரியங்களால் வீடுகளைச் சுத்தமாய் வைப்பதுடன் மீன், ஆட்டிறைச்சி, குடல், தலை முதலான ஆபாச பதார்த்தங்களை உபயோகிக்காதிருத்தல் வேண்டும். பரிசுத்தத்தால் விஷபேதியை வரவொட்டாது தடுத்துக் கொள்ளலாம்.

விஷபேதி கண்டவர்களுக்கு—வியாதி எத்தகைய ஸ்திதியிலிருந்தாலும் (சலன் இன்ஜெக்ஷன்) செய்து பயனில்லை எனக் கைவிட்டவர்களுக்கும், நீர் இறங்காமல் பேதிமாத்திரம் ஆய்க்கொண்டு சரீரத்தில் எண்ணெய்ப்பசை அதிகரித்துச் சரீரம் பூராவும் சீதளமடைந்து அபாய ஸ்திதியி லிருப்பவர்களுக்கும்கூட—யாதொரு கவலையுமற்றுக் கீழ்க்கண்ட மருந்தை உபயோகித்துவந்தால் கட்டாயமாய் ஒருவர்கூட மரணத்தை யடையார் என்று நான் உறுதியாய்ச் சொல்லுவேன். இது என் அனுபவத்திற் கண்டது.

10-பலம் கறிமஞ்சள், 10-பலம் வேப்பிலை. இவ்விரண்டையும் ஒன்றிரண்டாக இடித்து 6-படி ஜலம்விட்டு 1-படியாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிப் புட்டியிலாவது வேறு பாத்திரங்களிலாவது (மட்பாத்திரம் நல்லது) வைத்துக்கொண்டு நோயாளி வேண்டியமட்டும் குடிக்கும்படி கஷாயத்தைக் கொடுக்கவேண்டும். விஷபேதி கண்டவர்களுக்குத் தண்ணீர்த்தாகம் அதிகமிருக்கும். அத்தகைய தாகம் தணியும்வரை மேல்சொன்ன கஷாயத்தைக் கொடுக்க வேண்டும். தாகமில்லாதவனுக்கு அடிக்கடி அதாவது 10-நிமிஷத்திற் கொருமுறை ஷை கஷாயத்தை இரண்டு அவுன்சுக்குக் குறையாமல் கொடுத்து வரவும். இப்படிச்செய்தால் 100-க்கு 100-கேசுகள் குணமடைவதை இதை உபயோகிக்கும் நீங்கள் உணருவீர்கள். இம்முறையைக் கண்ணுறும் நீங்களும், உங்கள் நண்பர்களும் உங்கள் ஊரார்களும், கையாண்டு சகலர்க்கும் சொல்லிவைக்கவும்.

டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.







## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(24-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "கூடிப் பிரியேல்"

" **கூடி**—(மனிதனே! நீ நல்லவரோடு உறவுகொண்டு,) சேர்ந்து, பிரியேல்—(பின்னர் அவரைவிட்டு) நீங்காதே" என்பது இதன்பொருள்.

மனத்தி லொன்றுவைத்து வாக்கி லொன்று பேசும் நயவஞ்சகரிடத்திலும், பிறரை அடுத்துக் கெடுக்கும் தன்மையுடையவரிடத்திலும், தம் காரியத்தில் மாத்திரம் கருத்தாயிருந்து அடுத்தவர் காரியத்தைக் கைநழுவ விடுவோரிடத்திலும் சிநேகங்கொள்ளலாகாது. களங்கமற்ற உள்ளமுடையவரிடத்திலும், தம்மோடு கூடியவர்க்குத் துன்பமுற்றகாலத்தில் உயிரைக் கொடுத்தும் அத்துன்பத்தை நீக்கக்கூடியவர்களிடத்திலும், உண்மையான நட்புடையவர்களிடத்திலுமே உறவுகொள்ளவேண்டும். அவ்வாறு கொண்டால் அந்த உண்மைச் சிநேகிதர்கள், ஒருவனுடைய ஆடை நழுவும்போது அவன்கை, அதனைப் பிடித்தற்கு எப்படித் தானே முற்பட்டு அவனுக்கு உதவி செய்யுமோ அதேபோலத் தம் நண்பர்க்குத் துன்பம் வரும்போது தாமே அதனை நீக்கி உதவிசெய்ய முற்படுவார்கள். இந்தகையோர் சிநேகத்தை எப்பொழுதும் கைவிடலாகாது; அங்ஙனம் கைவிடுவோர் பெரிய நன்மையை இழந்தவராவரர். இவ்வாறு நல்ல சிநேகிதரோடு கூடிப்பிரிந்து நலமிழந்தவர் தன்மையை அடியில் வரும் கதை விளக்கும்:

ஒரு நகரத்தில், பரசுராமன், பார்த்தசாரதி என்னும் இருவர் நண்பர்களா யிருந்தார்கள். பரசுராமன் சிறிது கைப்பொருளுடையவன்; பார்த்தசாரதி பொருளில்லாதவன்; சாப்பாட்டுக்கு ஒன்று மகப்படாமல் திண்டாடுவான். அவன் உணவின்றி வருந்துங் காலங்களில் பரசுராமன் அவனுக்கு உதவிசெய்து வந்தான். ஆடைகளும் வாங்கிக் கொடுத்து வந்தான். அவனுக்கு நோய்வந்தால் பரசுராமன் தனக்கு வந்ததுபோல நினைத்து நோய்க்குத் தக்க பரிகாரம் செய்வான். இப்படிப் பலவகையிலும் பரசுராமன் உதவி செய்துவந்ததால், பார்த்தசாரதி எந்தநேரத்திலும் அவனைவிட்டு நீங்காதிருப்பான்; இராக்காலத்திலும் அவனோடு இணைபிரியாதிருப்பான். இவ்வாறு இருவரும் இணைபிரியாத நட்பினரா யிருக்குங்காலத்தில் ஒருநாள் ஆற்றின் படித்துறையில் இறங்கிக் குளித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது, பார்த்தசாரதி படிக்கட்டிலிருந்து நழுவி வெள்ளத்தில் வீழ்ந்துவிட்டான். வெள்ளம் அவனை அடித்துக்கொண்டு போயிற்று. அவனுக்கு நீந்துதல் தெரியாததலால், அவன் தலை கீழாகச் சுழன்று நீரைக்குடித்துப் பிராணன் போகுந் தறுவாயில் மிதந்து சென்றான். கரையில் நின்றவர்கள், "ஐயோ! ஒரு வாலிபன் போய்விட்டான்! போய்விட்டான்!!" என்று கதறினார்கள். பரசுராமன் சிறிதும் தாமதிக்காமல் அவ்வெள்ளத்திற் குதித்தான். வெள்ளம் மிகுந்த வேகத்துடன் பயங்கரமாகச் சென்றும், அவன் அஞ்சவில்லை. தன்னுடைய நண்பனைக் காப்பாற்றுவதிலேயே ஊக்கங்கொண்டான். நீந்துவதில் கொஞ்

சம் பழகியிருந்தானுதலின் விரைந்து வெள்ளத்தில் நீந்திக்கொண்டே போய்ப் பார்த்தசாரதியைத் தூக்கிக் கரையிற் கொண்டுவந்து சேர்த்துக் காப்பாற்றினன்.

சில மாதங்கள் சென்றபின் பார்த்தசாரதிக்கு நல்லகாலம் வந்தது. அவனுக்குப் பரசுராமன் சிறிது பண உதவிசெய்தான். அதைக்கொண்டு பார்த்தசாரதி ஒரு வியாபாரஞ் செய்தான். அதில் அவனுக்கு நல்ல வருமானம் கிடைத்தது. சில ஆண்டுகளில் அவன் மிகுந்த பணக்காரனுய்விட்டான். கையில் பணஞ்சேரவே தன்னுடைய உயிர்த்துணைவனுகிய பரசுராமனைப் புறக்கணிக்க ஆரம்பித்துவிட்டான்; அவன் முன்னே செய்த நன்றிகளையெல்லாம் மறந்தான். அவனுடைய நெருக்கம் வைத்துக்கொண்டால் அவனுக் கேதாவது உதவிசெய்யவேண்டி யிருக்குமென்று அவன் சிநேகத்தைச் சிறிது சிறிதாக நழுவவிட்டான். அவனைக் கண்டபோது அவனோடு பிரியமாகப் பேசுவதில்லை. அவனுடைய நடக்கைகளைப் பார்த்த பரசுராமன், "இவன் மனம் வேறுவிதமாய்த் திரும்பியிருக்கின்றது; நம்மை விரும்பாத இவனிடத்தில் நாம் உறவுவைத்துக்கொண்டிருப்பதில் பயனில்லை" என்று தானும் அவனுடைய நேயத்தை விட்டுவிட்டான்.

பின்னர், பார்த்தசாரதி வேறு சில கெட்ட நடக்கை யுடையவர்களோடு சிநேகமானுன். அவர்கள் நல்ல நிலையிலிருப்பவர்களையும் பல தீயமார்க்கங்களில் இழுத்துவிட்டுக் கெடுத்துவிடக்கூடியவர்கள். ஆதலின் பார்த்தசாரதியைப் பற்பல கெட்டவழிகளில் திருப்பிவிட்டார்கள். அவன், சூதாட்டத்திலும், குதிரைப்பந்தயத்திலும், குடியிலும், வீண்வம்பு வழக்குகளிலும் பொருளைச் செலவிட்டு வந்தான். பரசுராமன் அவனோடு சிநேகமாயிருந்தால் அவன் தீயமார்க்கங்களிற் செல்லும்போது அவனைத் தடுத்திருப்பான்; இப்போது அவனுடைய உறவு இல்லாததால் பார்த்தசாரதி, தன் மனம் சென்ற வழிகளில் நடக்கலாயினன். அவ்வாறு நடந்ததால் சிறிது காலத்திற்குள் அவன் சம்பாதித்து வைத்திருந்த பொருள்களெல்லாம் தொலைந்து போயின. அவன் ஒரு கலகத்தில் அகப்பட்டு ஆறுமாதகாலம் சிறைவாச தண்டனையும் அடைந்தான். முடிவில் அவனுக்குத் தாங்க முடியாத வறுமை யுண்டாய்விட்டது; அவன் ஆதியிலிருந்த நிலைமையினும் மிகத் தாழ்ந்த நிலைமையை அடைந்துவிட்டான். அவனுடைய உடம்பில் மேகவியாதி முதலிய பலவகை நோய்களுண்டாய்விட்டன. வறுமையாலும், பிணிகளாலும் ஏற்பட்ட துன்பத்தை அவன் சகிக்கமுடியாமல் படாதபாடெல்லாம் பட்டான்; தன்னுடைய பழய நண்பனுகிய பரசுராமனிடம் தன் குறைகளைச் சொல்லிக்கொள்ளலாமா என்று நினைத்தான்; தான் அவனிடம் நன்றியறிதலின்றி நடந்துகொண்டதுபற்றி அவ்வாறு செய்ய நாணிப் பேசாமலிருந்துவிட்டான். முடிவில் ஒருநாள் பரசுராமனே, பார்த்தசாரதியின் நிலைமையை உணர்ந்து அவன்மீது பரிவுகொண்டுவந்து அவனைப் பார்த்தான். பார்த்தசாரதி அவனைக்கண்டதும் தன்னுடைய பரிதாபநிலைமையை வெளியிட்டுக் கண்ணீர்விட்டழுதான். பரசுராமன், "நீ என்னுடைய உறவை யொழித்துத் தீயோருடன் கூடியதால் இந்நிலைமையை அடைந்தாய்" என்று சொல்லி மீண்டும் அவனுக்குப் பல உதவிகளைச் செய்தான். பார்த்தசாரதியின் துன்பங்கள் ஒருவாறு நீங்கின. (தொடரும்)

செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

---

# உரை மணி மாலை.

(39-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஒருவன் ஒரு பெண்ணின்மீது கௌரவமான காதலைக்கொண்டு அதனையும் அவள் அங்கீகரித்து, தனது புத்தி, யுக்தி, யோசனை இவற்றுடன் தைரியத்தையும் அவள் அவனுக்குக் கூறுவாளாயின், அவன் மாபெரும் வேலைகளையும் செய்து முடித்துப் பெருமையும் புகழும் கூடிய சுகமான வாழ்வை அடைவான் என்பதில் ஐயமில்லை.

*　　　　*　　　　*

ஒரு பருவத்தில் மரத்தினின்றும் இலைகள் உதிர்ந்தபோதிலும் மற்றொரு பருவத்தில் பச்சைப் பசேலென்று பழையபடி துளிர்த்துவிடுகின்றன. அதேபோல ஒருசமயம் மட்டில்லாச் சங்கடங்கட்காளாகும் மனிதனொருவன் மறுசமயம் கவலையற்ற வாழ்வை நடத்துவான் என்பது திண்ணம்.

*　　　　*　　　　*

தாய், தந்தை, குரு, பெரியோர், ஆன்மா ஆகிய இவர்களை நாம் மஹா பிரயாசைப்பட்டேனும் திருப்தி செய்விப்பது நமது கடமைகளிலொன்றாகும்.

*　　　　*　　　　*

தேவர்கள், பித்ருக்கள், பெரியோர்கள், பிரமசாரிகள், அதிதிகள் ஆகிய இவர்கள் ஐவரையும் பூஜிப்பதால் ஒருவன் சுகமடைவான்.

*　　　　*　　　　*

சாதுசங்கம் மனத்திற்குக் கோடைகால சந்திரனைப்போல குளிர்ச்சியையும் சந்தோஷத்தையும் கொடுக்கும். நமது 'அஞ்ஞானமென்னும்' பனி சத்துக்களென்னும் சூரியனைக்கண்டதும் பறந்தே போம். இவர்களது சேர்க்கை கங்கையைப்போல சகல பாபங்களையும் போக்கக்கூடியது; காம தேனுவைப்போல கேட்டதைக் கொடுக்கக் கூடியது. ஆனால் இவர்களது சேர்க்கையோ பூர்வபுண்ணிய வசத்தினால் மட்டுமே கிடைக்கக்கூடியது.

*　　　　*　　　　*

கையருகிலிருக்கும் வேலை எளிதாயிருப்பினும் சரி அல்லது கஷ்டமாயிருப்பினும் சரி அதனையே முதலில் செய்துவிடுவது நல்லது. அங்ஙனம் பிறர்க்குச் செய்யக்கூடிய சுலபமான உதவிகளையும் நாம் புரிதல் நலம்.

*　　　　*　　　　*

இளமைப் பருவம் சீக்கிரம் அழிந்துபோகக் கூடியது. அப்பருவத்தில் ஆரோக்கியமான தூய்மை பொருந்திய வாழ்வை நடத்துவோனே நல்லோர் போற்றும் நல்லவனாவான்.

*　　　　*　　　　*

கெட்டவளாயிருப்பினும் சரி அல்லது நல்லவளாயிருப்பினும் எந்த ஸ்திரீயும் கௌரவமாக நடத்தப்படவேண்டும். அதுவே ஆண்பாலார் அனைவரது கடமையாகும்.

(தொடரும்)

வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா.

---




## மாதரும் குடும்பமும்.

(12-ம் தொகுதி 559-ம் பக்கத் தொடர்ச்சி.)

குடும்ப நிர்வாகிகளாகிய மாதருக்கு இரண்டாவதாக இருக்கவேண்டிய இன்றியமையாத இயல்பாவது யாதெனில் :—குடும்பத்தில் கலகம் இல்லாமலிருக்கப் பார்த்துக்கொள்ளுதலாம். சலகமுள்ள குடும்பத்தை விடக் கடும்புலிவாழும் காடே சிறப்புடையதாகும். இதற்கு ஒற்றுமைக் குணத்தோடு கணவனது பந்துக்களைத் தம் பந்துக்களாகப் பாவிக்கும் ஓர் சிறந்த குணம் அத்தியாவசியமாகும். குடும்பச் சச்சரவுகளுக்குக் காரணராயிருப்போர் பெண்களேயாவர் என்பது நாடறிந்தவிஷயம். 'பெண்டுகள் கூடிடிற் பெருத்த சண்டையாம்' என்று ஓர் புலவரும் பாடியிருக்கிறாரே. சண்டை சச்சரவுகளால் அல்லும்பகலும் அல்லல்பட்டு அலையும் அபாக்கியக் குடும்பங்கள் நம் நாட்டில் அளவற்றிருக்கின்றன. அக்குடும்பங்களின் நிலைமை பார்க்கப் பரிதாபகரமானது. இத்தகைய குடும்பங்களில் வாழும் ஆடவர் 'ஐயோ! ஏன்தான் இச்சனியன்பிடித்த கலியாணத்தைச் செய்துகொண்டோமோ? இதைவிடச் சன்னியாசியாக வாழ்வதே நலமாக இருக்குமே' எனக் கதறுவர். வெளியிற்சென்று 'உத்தியோகமோ சத்தியோகமோ, கூலியோ நாலியோ' செய்துவிட்டு வீட்டிற்கு வந்ததும் தாயார் ஒருபுறம் தங்கை ஒரு பக்கம் மனைவி ஒருபக்கம் நின்றுகொண்டு சரமாரியாகச் சொன்மாரிபொழிந்து வம்புந் துன்பமுமான வார்த்தைகளை மூச்சுவிடாமல் உரத்த குரலுடன் பேசி அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் கும்பலாய்க்கூடி வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும்படி சண்டையிட்டுத் தொண்டைகிழித்துக்கொண்டிருப்பார்களானால் அவன் கதி யாதாகும். இவற்றையெல்லா மறிந்தல்லவா 'தாலிகட்டையிலே தொடுத்து நடுக்கட்டையிலே கிடத்துமட்டும் கவலைதானே' என்றார் ஓர் மகான். ஆகையால் மாதர் இவ்வித துர்ப்பழக்கத்திற்குச் சிறிதும் தம் குடும்பத்தில் இடமுண்டாகாதவாறு எச்சரிக்கையாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

இந்தத் துர்ப்பாக்கிய நிலைமைக்குக் காரணம் பெரும்பாலும் ஒற்றுமைக் குணமில்லாமையே யெனினும், அந்த ஒற்றுமை ஏன் உண்டாகவில்லையென்று யோசிக்குமிடத்து அன்னியர் என்கிற எண்ணம் மனதில் நன்கு ஆழ்ந்து வேரூன்றிக் கிடப்பதேயாகும். கணவனைச் சேர்ந்தவர்களாகிய மாமன், மாமி, நாத்தி, ஓரகத்தி, மைத்துனன் முதலானோரை "இவர்களே நம் பந்துக்கள்; தந்தையும் தாயும் சகோதரிகளும் சகோதரரும் இவர்களே" யெனக் கருதி அவர்களிடத் தன்புடன் நடந்துகொண்டால் இத்துணை விப

ரீதத்திற்கு இடமுண்டாகாது. இதனல் யாதொரு நஷ்டமுமில்லே. கஷ்டமுமில்லே. ஆனல் சமாதானமும் சந்தோஷமுமே எப்பொழுதும் குடிகொண்டிருக்கும்.

அப்படிச் செய்வது கஷ்டமான காரியமுமல்லவே. 'இவர்கள் நம் கணவனைப் பெற்று வளர்த்தவர்களல்லவா? அவருடன் பிறந்தவர்களல்லவா? அவரது அன்பிற்குரியவர்களல்லவா? நாம் வருதற்கு முன்பு இந்த வீட்டில் சர்வாதிகாரம் செலுத்திவந்தவர்களல்லவா? தங்களுக்கு உதவியாயிருக்க வேண்டுமென்றுதானே நம்மைக் கொண்டார்கள்? அவர்கள் பார்த்துக் கொண்டுவந்ததனுல்தானே நாம் வந்தோம்! நம் கணவன் தற்கால மடைந்திருக்கும் உயர்நிலேக்கு இவர்கள்தானே காரணகர்த்தர்கள்! நம் குடும்பத்தின் லாப நஷ்டங்களுக்கு இவர்களேப்போல் பாத்தியப்பட்டவர்கள் வேறுயாரிருக்கின்றனர்! நாம் வருதற்குமுன் நம் கணவனும் இவர்களும் எவ்வளவோ அன்னியோன்னியமாயும் அன்பாயும் இருந்துவந்தார்களே. இப்பொழுது நம்மால் இவர்களுக்கு மனக்கசப்புண்டாகலாமா? பார்ப்பவர்கள் என்ன சொல்வார்கள்? 'நாசகாலி வந்தாள்; அப்பனுக்கும் பிள்ளேக்கும்–ஆத்தாளுக்கும் மகனுக்கும் – அண்ணனுக்கும் தம்பிக்கும் – ஆகவொட்டாமல் செய்துவிட்டாள். எவ்வளவோ ஒற்றுமையாயிருந்த குடும்பத்தைக் கலேத்துப் பாழ்படுத்திவிட்டாளே' என்றல்லவோ பழிப்பார்கள்! 'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளேயும்' என்னும் பழமொழிப்படி, இப்பொழுது இவர்களுக்குச் செய்தது நாளேக்கு நமக்குமல்லவோ நடக்கும்? நமக்கு ஒரு மருமகள் வந்தால் நம்மையுமிப்படித்தானே செய்வாள்? அப்பொழுது நமக்கு எவ்வாறிருக்கும்! நாம் நம்முடைய தாய்வீட்டிற்குப் போனல் எவ்வளவு சொந்தம் பாராட்டி எப்படி நடந்துகொள்ள விரும்புகிறேம்? அங்கு இருக்கும் நமது அண்ணன் மனேவியாவது தம்பி மனேவியாவது நம்மிடத்திலும், நம் தாய்தந்தை தம்பி தங்கை முதலானவர்களிடத்திலும் எப்படி நடந்துகொள்ளவேண்டுமென்று விரும்புகிறேம். அப்படி அவள் நடவாமலிருந்தால் நாம் அவளேப்பற்றி எவ்வாறு தூஷணேயாகப் பேசுகிறேம்? எப்படிக் கண்டவரிடத்திலெல்லாம் சொல்லித் தூற்றுகிறேம்? என்று இவ்வகையான விஷயங்களே யெல்லாம் நன்ருக ஆலோசித்து யாவரிடத்தும் பிரியமாய் நடந்துகொள்ளவேண்டும்.

ஒருவேளே மாமன் மாமி முதலானவர்கள் இழிவாகப் பேசுவதும் வைவதும் அதிகாரம் செய்வதுமா யிருக்கின்றனரே! அப்பேர்ப்பட்டவர்களிடத்து அன்பு எப்படியுண்டாகும் எனச் சகோதரிகள் கேட்கலாம். அது உண்மையே. அவர்களுக்கும் அவர்கள் எவ்விதம் நடந்துகொள்ளவேண்டுமென்பதைச் சொல்லவும் நாம் கடமைப்பட்டிருக்கிறேம். இங்கு நாம் கொடுத்துள்ள தலேப்பெயர் 'மாதரும் குடும்பமும்' என்பதாகையாலும் அவர்களும் மாதர்களே யாகையாலும் அவர்களுக்கும் நாம் கூறல்வேண்டுவதவசியமே. ஆயினும் உங்களேக் குறித்துச் சொல்லு மிவ்விடத்தில் நீங்களிதை யேற்றுக் கொண்டு இதன்படி நடக்க முயலுங்கள். நீங்கள் நல்வழியில் நடந்துகொண்டால் தீமை தானுக விலகிப்போகும். "நன்மையைத் தீமை வெல்லாது'

என்று முன்னமே ஒருமுறை உங்களுக்குச் சொல்லியிருக்கிறோம். இன்னும் ஒருமுறை உங்களுக்குச் சொல்லுகிறோம். நன்மையைத் தீமை வெல்லாது; தீமையைத் தீமையால் வெல்ல முயலாமல் தீமையை நன்மையாலேயே வெல்லவேண்டும்; தீமையோடே தீர்த்து நிற்கலாகாது" என்னும் இவ்வாக் கியங்களை மனத்தில் பதியவைத்துக்கொள்ளுங்கள்; எல்லாத் தீமைகளும் உங்களை யணுகாதொழியும்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், சித்தூர்.

---

## மாதரும் ஆடையும்.

(34-ம் பக்கத் தொடர்ச்சி.)

பெண்கள் நகைகளில் எவ்வளவு பைத்தியம் கொண்டுளார்களோ அதை விட அதிகமாகவே பிறர் அணிந்திருக்கும் சேலைகளைப்போல் தாமும் சேலைவாங்கி உடுத்தவேண்டும் என்னும் பைத்தியம்கொண்டு விடுகிறார்கள். ஆகவே தாய் தந்தையர்களையோ, சகோதரர்களையோ, கணவர்களையோ அவைகளை வாங்கித் தரும்படி அவர்கள் நிர்ப்பந்திக்கின்றனர். என்ன செய் வான் கணவன்? கஷ்டப்பட்டுப் பணம் சேகரித்து ஏதாவது நல்ல சேலை நீடித்திருக்கக்கூடியதாக வாங்கிக்கொண்டு வந்தாலும் அது அவர்களுக்குப் பிடிக்கிறதில்லை. அவர்கள் தாமே நேரில்போய் வாங்கவேண்டுமென்று பிடி வாதம்பண்ணிக் கடைக்குச் செல்கிறார்கள்.

அங்கே சீக்கிரம் கைம்பெண்ணாகிற பெண்களின் விலையுயர்ந்த கல்யா ணக் கூறைகளெல்லாம் விலைக்குக் கடைகளுக்குத் திரும்பிவருவது அநேகருக் குத் தெரியும். பெண்கள் ஒன்றின்மேல் இச்சைவைத்துவிட்டால் அதைப் பிறர் மாற்றுவது முடியாது. முற்கூறிய பெண்கள் அநேகமாய், பிற்கூறிய புதிதெனக்கூறும் உபயோகித்த சேலைகளையே வாங்கிவருவர்; இல்லையேல் நூதனப் பேர்கொடுத்திருக்கும் நீடித்திராத மெல்லிய சேலைகளைக் கடைக் காரர் சொல்லும் விலைகொடுத்து வாங்கவேண்டும். இல்லாவிடில் கடைக்கா ரர் அச்சேலை குறைந்த விலைக்கு வரமாட்டாதென்பர்; மனைவியும் அதே சேலையை வாங்காது வீடு வரமாட்டேன் என்று கூறிவிடுவாள்.

இஃதன்றி நாகரீக மயக்கங்கொண்ட வாலிபரிடத்திலிருந்தும் பெண் கள் சிலவற்றைக் கைக்கொண்டுவிட்டனர். அவை கோணவாக்கெடுத்தல், ரவிக்கையைச் சிறிதுசிறிதாக அதிகப்படுத்திச் சொக்காய்களைப்போல் நீட்டிக் கொள்ளுதல் முதலியன. இவற்றைக்கண்டுதான் வாலிபர்கள் தங்கள் ஷர்ட் முதலியவைகளைச் சிறிது சிறிதாகக் குறைத்துக்கொண்டு கத்தரித்த தலை மயிரை நேர்வாக்கு எடுத்துக்கொண்டனர்போலும். இப்படியே இன்னும் சில பரிவர்த்தனைகள் நடந்துவருகின்றன. நிற்க,

இதனோடு பெண்கள் அணியும் ரவிக்கையை நோக்குங்கால் மிக்க வருந் தத்தக்கதாய் இருக்கிறது. அன்னியதேசத்து ஸ்திரீகளையும், ஆங்கில இந்திய ஸ்திரீகளையும், பிறரையும் பார்த்துவிட்டு அவர்களைப்போல் அதில் லேஸ் (Lace) முதலியவைகளை அழகென்று அனுவசியமாக அதிக விலைகொடுத்து வாங்கிச் சுருக்கங்கொடுத்துத் தைத்துச் சிறுவர்களுக்குப் போடுவதோடு நில் லாமல் அநேகர் தாங்களும் அணிந்துகொள்கிறார்கள். அன்னிய தேசத்தி லிருந்து இவர்கள் இஷ்டப்படிக்குக் கண்ணைக் கவரும்படியான பூவேலைசெய்த பகட்டுடைகள் தினே தினே வந்து குவிந்துகொண்டிருக்கின்றன. ஏழைக் குடும்பஸ்திரீகளும் தங்கள் கணவர்களை வருத்தி அப் பகட்டுடைகளைத் தங்க மெனத் தனங்கொடுத்துத் தயங்காது வாங்கி இஷ்டப்படி தைத்துத் தங்கள் அவயவங்கள் அனைவர் கண்ணிலும் படும்படி அணிந்துகொண்டு முக்கிய தேர் திருவிழாக்களுக்கு வந்துவிடுகின்றனர். அந்தோ! என்ன பேதமை!! எத்தகைய நாகரீகம்!!!

இந்நாகரீகத்தைப் பெண்கள் இன்னும் கைக்கொள்ளுவார்களானால் மெல்லிய ஆடையில் இச்சைவைத்து முடிவில் நிர்வாணமான அரசனின் கதைபோலாவரென்பதில் ஐயம் உளதோ? இவ்வளவு கஷ்டப்பட்டுக் கடன் கொண்டு வாங்கி அணிந்த அம்மெல்லிய ஆடைதான் நீடித்திருக்கிறதா? அது வும் இல்லையே! விடாமல் இரண்டொருவாரம் அணிந்தால் கண்ணைக்கவர்ந்து கொண்டிருந்த பூக்களெல்லாம் சாயம்போய் வெளுத்துவிடுகின்றன. மற்றும் இரண்டொரு வாரம் அணிந்தால் அவை நூல் விலகிக் கிழிகின்றன. இப்படிப் பெண்கள் கணவரிடம் நடை முதலில் செய்யச் சொல்வதோடு கல்யாண காலங்களிலும், தீபாவளி பொங்கல் முதலிய விசேஷங்களிலும் ஆடைகளில் பணம் அதிகமாகச் செலவழிக்கக் காரணகர்த்தர்களாய் இருக்கிறார்கள். இன் னும் தென்னிந்தியாவிலே அநேக குடும்பங்களில் கல்யாணக்கடன் ஏற்பட்டு இரண்டொரு தலைமுறை வரையில் வட்டி வளர்ந்து அடியோடு அக்குடும்பங் கள் கெடுவதைக் காணலாம்.

அதிக ஆபரணம் அணிவதால் இந்தியர் வறுமை அடைகின்றனர் என் பதைப் போதினியின் ஒரு சஞ்சிகையில் நண்பர் ஒருவர் தெளிவுற வெளிப் படுத்தியுள்ளார். அதைவிட நாகரீகப்பகட்டாடை உடுத்துவதால் வறுமை பன்மடங்கு அதிகரிக்கின்றது என்பதை அன்பர் உற்று நோக்குக.

அநாகரீகத்தை நாகரீகமெனக் கருதும் நவீன நாகரீக மயக்கம் நீங்கி, வருவாய்க் கதிகமாகக் கடன்பட்டுப் பகட்டாடைகளை வாங்கி அணிந்து வறு மையடைந்துவரும் அநாகரீகம் நம்மிந்தியாவை விட்டொழியும்வண்ணம் எல்லாம்வல்ல இறைவன் நமக்கருள்புரிவானாக. சுபம்.

ந. வேங்கடேசன்.

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.





## ஸ்ரீ ஆண்டாள்.

(519-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸ்ரீ ஆண்டாளின் எண்ணமெல்லாம் திருவமர்மார்பன் பக்கற்சென்று தேங்குவதாயிற்று. ஆண்டாள், தோழியர், பெற்றார், உற்றாரிவர்களுடன் என்றும்போல் மனம்பொருந்தி உரையாடாது தனித்தவளாயிருந்துவந்தாள். தோழியர் அவள் தன்மையை ஒருவாறு அறிந்திருப்பவர்களெனினும், தம் தலைவியின் சீரிய பெருமையின் ஏற்றத்தால் அவளை யணுகி எதுவும் தமக்குப் புலனாக ஒன்றைக் கேட்டறிய மனங்கொண்டிலர். அவர்கள், ஆண்டாளே தன்வாய்மலர்ந்து தன்மனங்கொண்டதைத் தாம் உணரக் கொடுப்பாளாயின் அவள் செல்லும் வழியே தாமும் செல்வதே தமக்குக் கடமையாம் எனத் தெளிந்தார்கள். ஆண்டாளோ! தனது மழலைமொழிப் பருவந் தொடங்கித் தனது இன்பதுன்பங்களைத் தமதாகப் பாவித்துத் தன்னுடன் பழகிய தோழியர் தன்னிலைகண்டு தளர்ந்திருப்பதை யறிந்தும், தன்பால் மிக்கெழுந்த நாணத்தால் தன் துணிபை அவர்களறிய அருள் செய்திலள்.

ஆண்டாளின், தனித்தநிலைமை அவள் தந்தை ஆழ்வாரின் மனநிலைமையை மாற்றியது. ஆழ்வார் தம்மைத் தன்வயமாக்கிக்கொண்டவாண்டாள் தனித்துறைந்து தளர்தல் கண்டு தாமும் தளர்ந்தனர். தம் புத்திரி தளிர்த்த மனதுடன் அரும்பிய நகையை, மலர்ந்தமுகத்திற் கூட்டிக் கனிந்தமொழி கொடுத்துத் தம்மை யின்புறுவித்துத் தந் நெஞ்சைத் தனக்குறைவிடனாகக்கொண்ட கோவலனுக்குத் தாம் செய்யுங் கைங்கரியத்தில் பங்கு கொண்டும் வந்தவள் எவ்வினையையு மொழித்துத் தங்கி யிருத்தற்குக் காரணத்தைத் தேர்ந்திலர். அன்றியும், அவர், பூமேலாம் பொற்புடை மங்கை எவரோடும் எக்களித்து வார்த்தையாடுமவள் பித்தேறினர்போலிருந்து வருதற்குக் காரணத்தையும் காணாராயினர். ஆழ்வார் அவள் நிலைமை யறியாராய்த் தாமுமோர் நிலைமையில் நில்லாராய்ச் சிலநாட்களைப் பல்லாண்டுகளாகக் கழித்தனர். மேல் அவர் தமது ஞானச்செல்வி, தமக்கேயன்றித் தன்னுடைய தோழியருக்கும் மனவருத்தமுண்டாகத் தனித்துறைதலின் காரணத்தைத் தோழியர் ஆய்ந்துரைத்த சிலவுரையால் உணர்ந்த தம்மனைவி தமக்குச் சிலவுரையிற் சொல்ல, தம் புத்திரியின் மனநேர்மையை யுணரத் தலைப்பட்டார். மனைவியும் ஆண்டாளின் மணம்பற்றித் தம் மனம் கொண்ட மணாளர் பெரியாழ்வாரிடத்தில் வினயமுடன் விண்ணப்பமிட்டனள். ஆழ்வார் தம் வாழ்க்கைத் துணைவி தம் மனங்கொள்ள மொழிந்ததனை

நேர்ந்து அருந்தவப்பேருகப்பெற்ற பெண்பிள்ளையின் அரிய மணவினையைத் தம் மனத்துட்கொண்டனர். நாளும் அவர்க்கு அவ்வெண்ணம் அதிகரித்து வருதலாயிற்று. ஆண்டாளுக்கு அமுதூட்டியும், அவளை ஆதரித்தும், அவள் மழலை மொழிகேட்டும் மகிழ்ந்த அன்னையார் தம் புத்திரியின் மணக்கோலத்தினையும் கண்டு மகிழும் நாளை யெதிர்பார்த்தவண்ணமா யிருந்துவந்தாள்.

குளிர்ந்த மனந்தங்கிய கோதை, தம்முடன் குதூகலித்து வந்தவள், தம்முடன் கலத்தலின்றித் தனியளா யிருந்து வருதலைக்கண்ட தோழியர், பெரிதும் கவலைகொண்டனர். ஆண்டாளுக்கும் தமக்கும் இடையிலே எழும் ஆனந்தமே யுணவாக, உணவும் மறந்து உடனுறைந்த தோழியர், அவ்வானந்தத்தைப் பெருமைக்காரணத்தால் எதுவும் பெறுமெண்ணங் கொண்டிலர். அத்தோழியர்களுள் ஆண்டி ளிளையா ளெனினும் அறிவின் முதிர்ந்தாள் ஒருதோழி ஏனையோரின் மனப்போக்குணர்ந்து அவர்களைத் தேற்றுதற்கு ஏற்றனசில யூகித்து உரைப்பாளாயினள். ஆண்டாளின் உள்ளக்கிடக்கையை அவள், அவளுடைய இயல்பான வொழுக்கங்களால் உய்த்துணர்ந்து "ஆண்டாள், விண்ணவர் பெருமானுய்க் குளிருவிபாய் திருவேங்கடத்துறைவான் பக்கல் தன் மனத்தைச் செலுத்தியிருக்கின்றனள். அவள், மனம் அவனடிக்கீழ்ச்சென்று பக்திவடிவமாய்த் தேங்கிக் கிடக்க நம்முடன், ஆண்டாள் பேசுகிற்றிலள் எனச் சொல்லுவது என்? அவள் தன் மனத்தவளாய்த் தன்னுணர்வு கொண்டவளாயிருந்தாலன்றே, என்றும்போல் நம்முடன் பழகுவள். ஒன்றைப் பறி கொடுத்தவர் ஏதும் நினைத்தலின்றித் தனித்துப் புலம்புவராயின் தன் மனத்தையே பறிகொடுத்துவிட்ட ஆண்டாள் தனித்துறைதலை ஒருவர் எடுத்துரைக்கவும் இயலுமோ! நம் தலைவி, உலகத்திற்குத் தலைவனுரும் முழுமுதற்கடவுளாம் அரங்க நகரானடியில் தன் றலையைச் சேர்த்தினள். அவன் அடிக்கீழ் ஆருத காதலன்புகொண்டு அவனையே தனக்குத் தலைவனுகக்கொள்ளவும், உலகத்தவரிடம் தான்காட்டும் அருளுக்கு அவனை இணங்குவானுகச் செய்யவும் கருதிவிட்டனள். நிற்க, அருமைத் தாய் தந்தையர்கள் ஆண்டாளுக்கு நல் மணவாளனைத் தேடித்திரிகிருர்களென்றும் அறிகிறேன். சர்வமுணர்ந்த ஆழ்வார் தம்புத்திரியின் ஒழுக்கநெறியினை உணரர்து போயினரே. தலைவிபால் பெருக்கெடுத்த அன்புடையீர்! அவள் நிலைமைகண்டு நீங்கள் வருந்துதலின்றி யிருத்தலை யான் வேண்டுகின்றேன். என்னுடைய இக்கூற்றையும் ஈதெழ இடந்தந்துறையும் ஆண்டாளின் மனப்போக்கையும் நீவிர் எள்ளி நகையாடுதலுங்கூடும். எனினும் எனது மாற்றமும், ஆண்டாளின் மனத்தின் ஏற்றமும், உரியகாலத்தில் உங்களுக்கு ஏமாற்றத்தைத் தருதல் நிச்சயம் என்னும் இவ்வார்த்தையை நீங்கள் மறவாதிருக்கக் கடவீர்கள்" என்று சொல்லினுள். இவ்வசனம் கேட்ட தோழியருள் ஒருத்தி "உனது ஆழ்ந்துரைக்கும் வன்மை எவரும் மகிழத்தக்கதே; நன்கு வகுத்தும் உரைத்தனை. சர்வவல்லமை யுடையவனும் சரணுகதரக்ஷகனும் சர்வேஸ்வரனுமான நந்தகோபன் குலத்துத் தோன்றும் வள்ளளிடத்து ஆண்டாளுக்குண்டான பக்தியை யறியாதாரெவர்? பக்தியுடையவளாகின்ருள் என்ற அக்

காரணங்கொண்டு அவள் அவனையே மணக்க விரும்புகின்றாள் என்கின்றனையே; மணக்க விரும்பினும் அது தான் இயலுவதாகுமோ ? ஆண்டாளும் நம் போன்று ஒரு பெண்ணேயன்றோ. பெண்ணொருத்தி விவாஹத்திற்குரிய பருவமடைய அவளுடைய குண ஒழுக்கங்களுக்கும் அழகுக்கும் ஏற்றவன் ஒருவனை, பெற்றோரன்றே நன்காய்ந்து அவளை அவனுடன் மணத்திற் புகுத்துவர். நீ சொல்லியவாறே உனது மாற்றம் எங்களுக்கு மாறுபட்ட எண்ணத்தையே தருகின்றது. ஏமாற்றம் எங்களுக் கென்று சொல்லினை; அதுவும் காணும் ஆவல் கொண்டோம்'' என்றாள். அறிவின் முதிர்ந்த அத் தோழி, ''தலைவியாம் ஆண்டாளின் இனத்துப் பழகினீர்! உமக்கு இவ் வெண்ணம் எழுதல் இயற்கையே. இவ்வார்த்தை யெனக்குப் புதிதன்று. எனது வார்த்தை புதியதொன்றே யாதலின் நீங்கள் மாறுபடுவதில் வியப்பில்லை. ஆண்டாள் நம்போலும் பெண்களில் ஒருத்தியே யென்ற எண்ணமுடைய உங்களுக்கு ஒருவார்த்தை சொல்லக் கேண்மின். ஆண்டாள் உலகத்துப்பெண்களில் ஒருத்தியே யென்று அறிவுடையார் மதிக்கப் பெண்ணாகப் பிறந்தவளல்லள். உலகத்தவர் தம் இருகையினையும் தம் தலைமேற் கூப்பித்தொழும் பெருமைவாய்ந்த அவன் றன்னைவிட்டகலாத அருந்தெய்வமே என்று மதிக்கப் பிறந்தவளென்றறியுங்கள். அவர்கள் அவ்வாறு மதிப்ப ரென்றதற்குக் காரணம் அவன்பாற் செல்லும் மாறாத அவளுடைய அன்பே என்று அறியுங்கள். அவளுக்கும் ஏனையவருக்கும் 'பெண்' என்ற பேச்சளவிலே ஒற்றுமை யுண்டென்பதை யானும் ஒப்புகிறேன். ஒப்புமைக்கிடமாம் அறிவொழுக்கங்களில் அவளுக்கும் ஏனையருக்கும் உள்ள வேற்றுமையை நீங்களே நன்கு அறிவீர்கள். உலகத்துப் பெண்களில் அவளும் ஒருத்தியாயின், தனக்குரிய மணப்பருவத்தில் பெற்றோரே மணம் புணர்த்தப்பெற்று மணவாளனுடன் மனமொத்துறைந்து இல்லறநெறியில் வாழ்க்கைகொண்டு புத்திரப் பேறு முதலிய பெற்று இல்லறத்தை அது செய்யத்தகுந்த முறைமையிற் செய்வள். ஆண்டாளோ அக்கூற்றிற் செல்லும் எண்ணத்தவளல்ல ளென்பதை யான் சொல்லிய உண்மையாற் றெளிந்து என்னுரையே பொருளுரையாகக் காணும் காலத்தைக் கருத்திருத்திக்கொள்ளுங்கள் என்பதை மீண்டும் வற்புறுத்துகிறேன்'' என்றாள்.

இவ்வகையில் பெற்றவர் ஒருபுறமும் தோழியர் ஒருபுறமும் தந்நிலைமை யுணராதவராய் வருந்தத் தனியளாய்ப் பதினாறுமாயிரவர் தேவிமார் பணி செய்ய துவரையென்னும் திருப்பதியில் நாயகராகி வீற்றிருக்கும் மணவாளன் பாலே ஒடுங்கிய மனத்தினளாய் உடல் மெலிந்தனள் ஸ்ரீ ஆண்டாள். அவள் அவனைக் காணலாகும் நோன்பு முதலிய செய்தலிற் சிந்தையும், அவன்சீர் பரவிப் பல்லாண்டு பாடுகையில் அன்புங்கொண்டு உள்ளுவாருள்ளமே யுறையத்தக்க கோயிலாகக் கொள்பவனாகிய வண்புகழ் நாரணன் திண்கழலிற் றன்னைச் சேர்விக்கும் செய்கையிற் செல்பவளாயினள்.

(தொடரும்) N. திருவேங்கடத்தையங்கார்.

# விசூவியஸ் எரிமலையின் சரித்திரம்

(32-ம் பக்கத் தொடர்ச்சி)

மேற்குறித்த காலத்தில் பெரியப்ளினியும், அவர் மருமகனாகிய சிறிய ப்ளினியும், விசூவியஸ் மலையடிவாரத்திற் கருகாண்மையில் கடற்கரையோரமாகவிருக்கும், மைஸீனம் என்னும் கிராமத்தில் குடியிருந்தார்கள். இப்படி அவர்கள் அவ்விடம் வசித்துக்கொண்டிருக்கையில் மேற்சொல்லிய 79-வது வருஷம் ஆகஸ்டுமீ 24-ம் தேதி பெரிய ப்ளினி யானவர் ஸ்நான பானாதிகளை முடித்துக்கொண்டு தமது அறையில் உட்கார்ந்து ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்து யோசித்தவராயிருந்தார். அத்தருணத்தில் அவர் மனைவி சரேலென்று உள்ளேவந்து, தான் என்றும் பார்த்திராததும், வெகு ஆச்சரியமான தோற்றமுடையதுமான ஒரு பெரிய மேகத்தைக் கண்டதாகவும், அதை அவரும் வந்து பார்க்கவேண்டுமென்றும் வேண்டினாள். அதுகேட்டு அவர் வெளியேவந்து அவ்வதிசயக்காட்சியை நன்றாய்க் கண்டறியும்பொருட்டு ஒரு பெரிய மேடையின்மேல் ஏறிப்பார்த்தார். வெகுதூரத்திலிருந்து அந்த மேகமானது தென்பட்டபடியால் எவ்விடத்திலிருந்து அது உண்டாயதென்பதை அவர் உடனே நிதானிக்க முடியவில்லை. ஆயினும் பிற்பாடு இது விசூவியஸ் மலையிலிருந்து எழும்பிய புகையாகத் தெரியவந்தது. இப் புகைத்திரள் ஒரு பெரிய தேவதாருமரம்போலக் காணப்பட்டது ; அடியில் பருமனாய்த் தடித்த அடிமரம்போலவும், மேலே வெகு செழிப்பாய்க் கிளைத்துத் தழைத்துக் கிளையுடனும், காயுடனும், பூவுடனும் கவிழ்ந்துகொண்டிருக்கும் மரத்தின் மேற்பாகம் போலவும் தோன்றிற்று. சிலசமயங்களில் இது, பெரிய பீரங்கிகள் முதலியன வெடிக்கும்போது உண்டாகும் வெளிச்சம்போல் அதிக காந்தியுடையதாயிருந்தது. இருட்டாயிருந்த சமயங்களிலோ இப்புகைத்திரளினடுவில் பிரகாசமுள்ள சிறிய எரியும் வஸ்துக்கள் பளிச்சுப் பளிச்சு என்று மின்னிக்கொண்டிருந்தன. அவர் இந்த ஆச்சரியத்தைக் கண்ணுற்றதும் அது உண்டாகும் இடத்திற்கு அருகாண்மையில் சென்று அதன் விசேஷத்தை அறியும் ஆவலுற்றவராய் அவ்விடம் பிரயாணமாய்ப் போக வேலைக்காரரிடம் படகு ஒன்றை ஆயத்தம் செய்யச் சொன்னார். அதற்குமுன் விசூவியஸ் மலையடிவாரத்தில் ஓர் கிராமத்தில் வசித்துக்கொண்டிருந்த ரெக்டைனா வென்னும் ஒரு ஸ்திரீ, அவ்வெரிமலையாலுண்டான ஆபத்தான நிலைமையை யறிந்து, தான் கப்பலேறி வேறெவ்விடமாவது போய் உயிர் தப்புவதைத் தவிர தப்பிப்பிழைக்க வேறுவகையில்லை யென்று தீர்மானித்து ப்ளினி என்பவருக்கு இச்சமாசாரத்தைக்காட்டி ஒரு கடிதம் எழுதியிருந்தாள். அக்கடிதம் அவருக்கு அப்போது கிடைத்தது. அதைக் கண்டதும் அவர் இம்மாதிரி மலையைச் சுற்றிலுமுள்ள கிராமங்களில் அவதிப்படு மனேகரைக் காப்பாற்ற எண்ணங்கொண்டவராய் அநேகம் படகுகளைச் சித்தம்செய்துகொண்டு மலையைநோக்கிக் கடல்மார்க்கமாகச் சென்றார். அவ்விடத்துச் சனங்களெல்லாம் இப்பெருங்கேட்டுக்குப் பயந்து அங்கு மிங்குமாக ஓடிக்கொண்டிருந்தார்கள். இருந்தாலும் இவர்மட்டும் அந்த ஆபத்தான இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார். போகப் போக இவர் ஏறியிருந்த படகில், எரிந்துகொண்டிருந்த நெருப்புத்துண்டுகளும், சூடுண்ட கல்துண்டுகளும் வந்து விழத்தலைப்பட்டன. இச்சமயத்தில் மலையிலிருந்து வீசப்பட்டு வந்துவிழுந்த கற்களோ மணற்காடாயிருந்த சமுத்திரக்கரையை

எல்லாம் நிரப்பிவிட்டன. இவ்விதமாய்ப் பலகேடுகள் உண்டாவது தெரிந்த படியால் படகோட்டும் மாலுமி திரும்பிப்போய் விடுவோமென்று எவ்வளவோ சொன்னான். சொல்லியும் ப்ளினி யானவர் கேளாமல், தம் சிநேகிதராகிய பாம்போனியேனஸ் என்பவர் இருக்கிற இடத்திற்குப் படகைப் படகோட்டியால் செலுத்தச்செய்து அவ்விடம் போய்ச்சேர்ந்தார். பாம்போனியேனஸ் இருந்த இடம் அத்தருணத்தில் அவ்வளவு தீவிரமான அபாயஸ்திதியில் இல்லாமற்போனாலும், அவர், தம் சாமான்களையெல்லாம் படகிலேற்றி அவ்விடம்விட்டுப் புறப்படுவதற்குச் சித்தமாயிருந்தார். ஆனால் காற்று வாய்க்கவில்லையாதலால் அவர் பிரயாணம் தடைப்பட்டிருந்தது. அதற்குள் அவர் சிநேகிதராகிய ப்ளினி போய்ச் சேர்ந்தார். சேர்ந்ததும், பயந்திருந்த பாம்போனியேனஸ்ஸைத் தேற்றி, தாம் ஸ்நானம் செய்து உணவுகொள்ள உட்கார்ந்தார். இவர் செய்கை இப்படியிருக்க, அங்கோ மலையானது அநேக விடங்களில் அகோரமாய் வெடிப்புக்கொண்டு வெகு கடூரமாய்ப் பொங்கி எரியத்தலைப்பட்டது. இதற்குள் இராத்திரியாய் இருள் மூடியபடியால் இம் மலையின் எரியும் வஸ்துக்கள் அதிகபிரகாசத்துடன் தோன்றியதோடு பார்ப்பவர்கள் அஞ்சி நடுங்கும்படியாய் அவ்வளவு கோரமாயும் பயத்தை விளைவிக்கத்தக்கனவாயும் காணப்பட்டன. இந்த விபரீதக்காட்சியை பாம்போனியேனஸ்ஸும் அவர் உடனிருந்த மற்றவர்களும் கண்டு நடுநடுங்கித் தியக்கமுற்றார்கள். ஆனால் ப்ளினியோ மனந்தளரவில்லை.

> " மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
> எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
> கருமமே கண்ணாயி னார் "

என்றபடி அவருக்கு மற்றவைகளைப்பற்றிய சிந்தனை யொன்று மேற்படாமல் எரிமலையின் செய்கையை மேன்மேலும் பார்த்து அறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் அதிகரித்துக்கொண்டேவந்தது. அவர் தமது நண்பர் முதலானவர்களுக்கு உண்டாயிருந்த பயத்தைப் போக்குவதன் பொருட்டு, இந்தப் பேரொளி எரிமலையி லிருந்து விழும் வஸ்துக்கள் சுற்றுப் பக்கத்துக் கிராமங்களில் விழுந்து அவ்விடமுள்ள வீடுகளெல்லாம் தீப்பற்றி எரிவதனால் உண்டாகும் ஒளி என்றும், சத்தமோ வீடுகள் முதலியவை இடிந்துவிழுவதால் உண்டாகும் சத்தமென்றும் சொல்லி அவர்களைத் தேற்றினர். இவ்வாறு சொல்லி, அச்செய்கைகளைச் சிந்திக்காமல் சயன அறையிற்சென்று நன்றாய் அயர்ந்து நித்திரைசெய்தார். இதற்குள் இவர் இருந்த அறைக்கு முன்புறமிருந்த முற்றமுழுதும் மலையாற் கக்கப்பட்ட எரியும் வஸ்துக்களால் நிரப்பப்பட்டது. இன்னும் சற்றுநேரம் அவர் அவ்விடத்திலேயே இருந்திருப்பாரானால் உருத்தெரியாமல் உருகிநீறாகியிருப்பார். இவர் மலையின் எரிச்சலுக்குக் கொஞ்சமேனும் பயப்படாமல் அயர்ந்து நித்திரை செய்வதை மற்றவர்கள் கண்டு ஆச்சரியமடைந்து க்ஷணப்பொழுதில், அங்கு நேர்ந்த அபாயத்தை அவருக்குத் தெரிவித்து அவரை நித்திரையிலிருந்தும் எழுப்பினார்கள். எழுந்ததும் அவர் தம் நண்பராகிய பாம்போனியேனஸ்ஸும் மற்றவர்களும் இருக்குமிடத்திற்குப் போனார். அவர்கள் பயந்தவர்களாதலால் மனந்தளர்ந்து கொஞ்சமேனும் உறக்கமற்றவர்களாய் விழித்திருந்தார்கள். (தொடரும்)

A. R. M. உடையப்ப செட்டியார், சொக்கநகரம்.

---

# ஸ்ரீமதி சாரதாமணி தேவியார்.

இவர், ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் மனைவியார். இவ்வம்மையாரின் ஜீவியசரிதம் ஆங்கிலமுணர்ந்தோர் படித்துணரும்பொருட்டு மாடர்ன் ரெவ்யூவில் இராமாநந்த சட்டர்ஜீ அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிறது. அது, தமிழ் மக்கட்கும் பயன்படுமாறு அதனைத் தமிழில் மொழிபெயர்த்து யாம் வெளியிடுகிறோம் :—

இந்துக்களுடைய சாஸ்திரங்கள் கிரகஸ்தர்களையும், சந்நியாசிகளையும் பாராட்டுகின்றன. கிரகஸ்தன் ஒருவன்தான் மற்ற ஆசிரமங்களிலுள்ளவர்களுக்கெல்லாம் அடிப்பீடமா யிருக்கிறான் என்பதை உண்மையாகவே அவை எடுத்துரைத்து வருகின்றன. எல்லாருமே சந்நியாசிகளாகவும் கிரகஸ்தர்களாகவும் இருந்துவிடமுடியாது. சந்நியாசி, கிரகஸ்தன் ஆகிய இவர்களில் யாராயிருந்தபோதிலும் அவர்களுடைய தாரதம்மியங்களை அறிந்து நாம் அவர்களை மதிக்கவேண்டுமேயல்லாமல் வெளிவேஷங்களைக் கொண்டு மயங்கிவிடக்கூடாது.

சந்நியாசிகளா யிருப்பவர்கள் பிறந்ததுமுதல் பிரமச்சரிய விரதத்தை மேற்கொண்டவர்களா யிருக்கிறார்கள். அப்படியில்லாது கலியாணம் செய்துகொண்டு மனைவி மக்களுடன் வாழ்ந்தவர்களா யிருந்தாலும் அந்தப் பந்தங்களையெல்லாம் ஒழித்துவிட்டுச் சந்நியாச ஆசிரமத்தை மேற்கொண்டவர்களா யிருக்கிறார்கள். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் கலியாணம் செய்துகொண்டிருந்தார். அவருக்கு அவருடைய இருபத்திறான்காவது வயதில் திருமணம் நடந்தேறியது. ஆனாலும் அவர் சந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார். அவருடைய சம்மதியில்லாமல் அவருக்குக் கலியாணம் நடக்கவில்லை. அவருடைய முழுச் சம்மதத்தின்பேரில் அவருக்குக் கலியாணம் நடந்தது. அவர் தம்முடைய மனைவியாராகிய சாரதாமணிதேவியாரைத் தாமாகவே பெரியவர்களின் முன்னிலையில் தேர்ந்தெடுத்துக்கொண்டார் என்பது நூல்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகைய மனைவியுடன் அவர் மற்ற கிரகஸ்தர்களைப்போல் வாழவில்லை. மனைவியுடன் தேக சம்பந்தம் வைத்துக்கொள்ளாமல் அவர் தம்முடைய காலத்தைக் கழித்து வந்தார். இதைக்கொண்டு அவர் தம்முடைய மனைவியைப் புறக்கணித்துவிட்டார் என்று எண்ணிவிடக்கூடாது. அவர் தம்முடைய மனைவியை அருகிலேயே வைத்துக்கொண்டிருந்தார். அவர் தம்முடைய செயல்களாலும் அன்புபொருந்திய கட்டளைகளாலும் தம்முடைய மனைவியைத் தமக்கு உற்ற துணைவியாகவும் நண்பியாகவும் செய்துகொண்டார். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரின் குணாதிசயங்களில் இஃதொன்று. அவரைப்போல் அவருடைய மனைவியராகிய ஸ்ரீமதி சாரதாமணி தேவியாரும் அநேக நற்குணங்களைத் தம்மிடத்தே கொண்டு விளங்கினார் என்பதற்கு அநேக சான்றுகள் இருக்கின்றன. ஸ்ரீ இராமகிருஷ்ணர் அந்த அம்மையாரை நற்குணங்களில் திருத்தியவராயிருந்தாலும் அம்மையாரும் அதற்குத் தக்கபடி மனமிசைந்து நடந்தது தான் விசேடத்திலும் விசேடமாகும். ஓர் உபாத்தியாயரிடத்தில் படிக்கும் எல்லா மாணவர்களும் உயர்ந்த அறிவையும் குணாதிசயங்களையும் ஒரேபடித்தாக அடைந்துவிடல் முடியாது; இயற்கையில் குருபோதனைக் கிசைந்து நடக்கும் குணமுடையோரே அவற்றை அடைதல்கூடும்.

இத்தகைய ஸ்ரீமதி சாரதாமணி தேவியாரின் வாழ்க்கையைப்பற்றிய சரித்திரத்தைத் தெரிந்துகொள்ளவேண்டியது அத்தியாவசியமாகின்றது.

ஆனாலும் அந்த அம்மையாரைப்பற்றிய வரலாறுகள் முழுமையும் கிடைப்பது அருமையாயிருக்கின்றது. ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரின் சரித்திரத்தில் ஆங்காங்குக் கிடைக்கும் விஷயங்களைக்கொண்டுதான் அந்த அம்மையாரின் சரித்திரம் ஒருவாறு தெரிந்துகொள்ளக்கூடியதா யிருக்கிறது.

ஸ்ரீ இராமகிருஷ்ணருக்கு அவருடைய பெற்றோர்கள் குழந்தைப் பருவத்தில் "காதாதார்" என்னும் நாமகரணம் செய்திருந்தார்கள். அவர் சிறுவயது முதற்கொண்டே உலக விஷயங்களில் பற்றுக்கொள்ளாமலும், மனத்திருப்தியில்லாமலும் சித்தப்பிரமைகொண்டவர்போல் இருந்துவரலானார். இவ்வாறு இருப்பதைக்கண்ட அவருடைய தாயாரும் தமையனும் அவருக்குக் கலியாணம் செய்துவிட்டால் அவருடைய சித்தப்பிரமை நீங்கிவிடுமென்று எண்ணித் தங்களுக்குள்ளாகவே இரகசியமாய் அதைப்பற்றி ஆலோசிக்கலானார்கள். ஆனாலும் அவ்விஷயம் காதாதாருடைய செவிக்கெட்டியது. அதற்கு அவர் ஒருவித ஆட்சேபமுஞ் செய்யவில்லை. கலியாண விஷயத்தைக் கேட்டு அவர் ஆனந்தங்கொள்ள ஆரம்பித்தார்.

தகுதியான பெண்ணைப் பார்த்து அவருக்கு விவாகம் முடிப்பதற்காக அவரைச் சார்ந்தவர்களால் நாலா பக்கங்களிலும் தூதர்கள் அனுப்பப்பட்டார்கள். ஆனால் அவர்கள் தாங்கள் சென்ற காரியத்தில் ஜெயம்பெறாமல் திரும்பிவிட்டார்கள். அவர்கள் திரும்பிவந்ததைக் கண்ட காதாதார், பங்கூரா ஜில்லாவைச் சேர்ந்த ஜெயராம்பதி வாசியான இராமச்சந்திர முக்கர்ஜியின் பெண்ணாகிய சாரதாமணிதேவியைக் குறிப்பிட்டார். அதன்மேல் அவருடைய தாயாரும் தமையனும் அப்பெண்மணியை விசாரிக்க ஆளனுப்பினார்கள். பின்னர் எல்லாவித ஏற்பாடுகளும் தங்கு தடையின்றி நிறைவேறலாயின.

அதன்மேல் வங்காளி வருஷம் 1266 வைகாசி மாத பிற்பாதியில் காதாதாருக்கும் இராமச்சந்திர முக்கர்ஜியின் பெண்ணாகிய சாரதாமணி தேவியாருக்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது. கலியாணமாகும்போது காதாதாருக்கு இருபத்துமூன்று வயது முடிந்து இருபத்துநான்காவது வயது நடந்துகொண்டிருந்தது. சாரதாமணி தேவிக்கு ஐந்து வயது.

கலியாணகாலத்தில் தம்முடைய குடும்பத்தின் கௌரவம் போகாமல் இருப்பதற்காகவும், பெண் வீட்டார் தம்மை ஏளனஞ் செய்யாமல் இருப்பதற்காகவும் காதாதாரின் தாயாகிய சந்திரா தேவியார் தமக்குத் தெரிந்த அண்டைவீட்டிலுள்ளவர்களிடமிருந்து சில நகைகளை இரவலாக வாங்கித் தம்முடைய மருமகளுக்கு அணிந்தார். கலியாணமான சில தினங்கள் கழித்து அந்நகைகளைச் சொந்தக்காரர்களுக்குத் திருப்பிக்கொடுக்குஞ் சந்தர்ப்பம் வந்தது. காதாதாரின் தாயார் அந்நகைகளைக் கொடுத்துவிட்டால் தம்முடைய மருமகளுக்கு அணிந்துகொள்ள வேறு நகைகள் இல்லையேயென்று மிகவும் வருத்தப்பட்டார். தம்முடைய தாயாருக்கு நகைகளைத் திருப்பிக் கொடுத்துவிட நேர்ந்ததினால் ஏற்பட்ட மனக்கஷ்டத்தைக் காதாதார் அறிந்துகொண்டார். அங்ஙனம் அறிந்துகொண்ட அவர், தம்முடைய தாயாருக்குத் தேறுதல் வார்த்தைகள் கூறி, தம்முடைய மனைவி தூங்கிக்கொண்டிருக்கையில் அவ்வம்மையார்மேலிருந்த நகைகளைக் கழற்றிக்கொடுத்துவிட்டார். அந்த அம்மையார் விழித்தெழுந்தவுடன் தம்முடைய தேகத்தில் நகைகள் இல்லாததைக் கண்டு 'என்னுடைய நகைகள் எங்கே போய்விட்டன?' என்று மனங்கலங்கலானார். அதைக்கண்ட சந்திரா தேவி தம்முடைய மருமகளை மடியின்மேல் தூக்கி வைத்துக்கொண்டு "காதாதார் இன்னுஞ் சிலகாலங் கழித்து இப்போது உன்னுடைய தேகததிலிருந்து

கழற்றிவிடப்பட்ட நகைகளைக்காட்டிலும் அதிக விலை உயர்ந்த நகைகளை உனக்குக் கொடுப்பான்'' என்று கனிந்த மொழிகளால் அவருக்குத் தேறுதல் சொன்னார்.

நகைகளைக் கழற்றியதைப்பற்றிய விஷயம் இத்துடன் நின்றுவிடவில்லை. காதாதார் நகைகளைக் கழற்றிய அதே தினத்திலேயே கலியாணப் பெண்ணின் சிற்றப்பன் அவர்களுடைய வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அவருக்கும் இவ்விஷயம் தெரியவந்தது. அவர் இதைக் கேட்டு மனத்தில் அதிருப்தி கொண்டவராய்த் தம்முடைய அண்ணன் குமாரத்தியைத் தம்முடன் அழைத்துக்கொண்டு சென்றுவிட்டார். இங்ஙனம் நடந்துவிட்டதைக் கண்ட சந்திராதேவி மிகவும் மனங்கலங்கினார். அவருடைய மனக்கலக்கத்தைக் கண்ட காதாதார் அந்த அம்மையாரைப்பார்த்து, "கலியாணம் ஆய்விட்டது ஆய்விட்டதுதான். இனி பேச்சாலும் செயலாலும் அதை நிவர்த்திக்க மார்க்கமில்லை. நீங்கள் என் வீணில் மனக்கலக்க மடைகின்றீர்கள்; கவலையை விட்டுத் திருப்தியுடன் இருங்கள்'' என்று கூறினார்.

தம்முடைய தாயார் வீட்டிற்குச் சென்றிருந்த சாரதாமணி தேவியார் வங்காளி 1267-ம் வருஷத்தில் காதாதாருடன் அவருடைய சொந்த ஊராகிய காமார்புகூருக்கு வந்து சேர்ந்தார். இதற்குப் பின் ஸ்ரீ இராமகிருஷ்ணர் அநேக வருடங்கள் வரை காமார்புகூரை விட்டு வெளியே சென்றிருந்தார். வெளியே சென்றிருந்த காதாதார் வங்காளி 1274-ம் வருடத்தில் தம்முடைய ஆன்மார்த்த விஷயங்களில் தமக்குத் துணைபுரிந்த பிராமண ஸ்திரீயுடனும் தம்முடைய சகோதரர் புத்திரராகிய ஹரிதேவ் என்பாருடனும் தம்முடைய சொந்த ஊரை வந்தடைந்தார்.

(தொடரும்) A. துரை.

## அறிஞரின் அமுதமொழிகள்.

(40-ம் பக்கத் தொடர்ச்சி)

96. Only the actions of the Just
Smell sweet and blossom in the dust. *J. Shirley.*

நேர்மையாளர்களுடைய செயல்கள் (உயர்ந்த புஷ்பங்களைப் போல்) பரிமளிப்பதுமல்லாமல் மலர்ச்சியும் அடைகின்றன (அதாவது பரவுகின்றன). (ஜே. ஷேர்லி)

97. The state compels no man to drink,
Compels no man to game;
It is gin and gambling sink him down
To rags, and wants and shame. *Hannah More.*

ஒருவனைக் குடிக்கும்படியும், சூதாடும்படியும் அரசாங்கம் கட்டாயப்படுத்தவில்லை. (சிலர் தாங்களே அவற்றைப் பழகிக் கொள்கிறார்கள்). குடியும், சூதாட்டமுமே ஒருவனைக் கந்தையோடிருக்கும் நிலையிலும், வறுமையிலும், மானபங்கத்திலும் அமுத்தி வைக்கின்றன. (ஹான்னு மோர்)

98 On many a house the harmless babies
Are poorly clothed & fed,
Because the craving ginshop takes
The children's daily bread. *Hannah More.*

அநேக வீடுகளில் குற்றமற்ற குழந்தைகள், குறைந்த ஆகாரமும், உடையு முடையவர்களா யிருக்கிறார்கள். ஏனெனில், ஆவலோடிருக்கும் மதுபானக்கடை, அப்பிள்ளைகளுக்குரிய தினச்சாப்பாடு முதலியவற்றை விழுங்கிவிடுகிறது.

(ஹான்னு மோர்)

99. "Forgive and forget"
Thus friendship will flourish
And fellowship spread,
And for strife & contention
Peace prospers instead;
And the wise world wil. find
That it owes a deep debt
To that sweet motto—
Forgive & forget.

ஒருவன் செய்த குற்றத்தை மன்னிப்பதும் அதை மறந்துவிடுவேதும்தான் உசிதமானவை. அப்படிச் செய்வதனுல் நேசம் விருத்தி யடைகிறது; நட்பு பரவுகிறது; சண்டை சச்சரவுகளுக்குப் பதிலாகச் சமாதானம் வளர்கின்றது. 'ஒருவன் செய்த குற்றத்தை மன்னித்து மறந்துவிடு' என்ற சீரிய நீதிமொழிப்படி நடக்க உலகத்திலுள்ளவர்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

100. No matter how dark be thy days
How frowning the cloud over the ways
Be brave, and face every blast,
Storms come, but soon they are past.

உன்னுடைய ஜீவியகாலம் இருள் மூடியதாயிருந்தாலும் (அதாவது எவ்வளவு கெட்டதாயிருந்தாலும்) அதற்காகக் கவலையுறாதே; உன்னுடைய பாதையில் மேகமானது கர்ஜித்துக் கொண்டுவந்தாலும் பயங்கொள்ளாதே (அதாவது உனது வாழ்க்கை செல்லும் மார்க்கத்தில் என்ன இடையூறுகள் நேர்ந்தாலும் அவைகளுக்காக அஞ்சாதே) தைரியமாயிரு. (அதில் வரும்) ஒவ்வொரு புயற்காற்றையும் தைரியமாய் எதிர்த்துநில் (அதாவது புயற்காற்றைப்போல் வரும் கஷ்டங்களுக்காக மனச் சோர்வு கொள்ளாதே). புயற்காற்றுகள் வீசுகின்றன, மறுபடியுஞ் சீக்கிரத்தில் அவைகள் நின்றுவிடுகின்றன (அதாவது கஷ்டங்கள் உண்டாகிச் சீக்கிரத்தில் மாறுகின்றன).

(தொடரும்.) A. P. இராமன், B. A.

# குழந்தைகளும் நகைகளும்.

(ராவ்பகதூர். கிருஷ்ணராவ் பான்ஸ்லே எம். ஆர். ஏ. எஸ் அவர்கள் எழுதியது.)

சென்னையின் சிலபாகங்களில் பேர் ஊர் தெரியாத ஒரு மனிதன் சமீப காலத்தில் பள்ளிக்கூடத்துக்குப் போய்க்கொண்டிருந்த சில ஆண் குழந்தைகளையும், பெண் குழந்தைகளையும் தூக்கிக்கொண்டு போய் நகைகளைமாத்திரம் திருடிக்கொண்டு அவர்களை விட்டுவிட்டான். இவ்விஷயமாக மிகுந்த கிளர்ச்சி இந் நகரின் சுற்றுப்பக்கங்களில் உண்டாயிருந்தது. தெய்வாதீனமாய்க் குழந்தைகளின் உயிருக்கு ஒருவித ஆபத்தும் இல்லாமல் போய்விட்டது. இச்சிறுவர்கள் தகுதியான வயதடைந்தவர்களா யிருந்திருந்தால், அத்திருடர்கள் தங்களுடைய ஈனச்செயல் தெரியாமல் இருக்கும் பொருட்டு அவர்களுடைய உயிரை மாய்த்துவிட்டிருப்பார்கள். இவ்வாறு குழந்தைகள் களவாடப்பட்டு அவர்களுடைய நகைகள் போக்குப் போவதற்குப் பெற்றோர்களின் அறியாமையும், டாம்பீகமும், நகைப்பைத்தியமும் காரணங்களா யிருக்கின்றன. தனவந்தர்களுடைய குழந்தைகளுக்கு உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரை நகைகள் போடப்பட்டிருக்கின்றன. பெண் குழந்தைகளுக்கு அணியப்படும் நகைகளுக்கோ அளவில்லை. அவர்கள், பெண் குழந்தைகளுக்குக் காதில் இரண்டு அல்லது மூன்று நகைகள், தலையில் ஒன்று, மூக்கில் இரண்டு, கழுத்தில் இரண்டல்லது மூன்று, கையில் ஒன்றல்லது இரண்டு, இடுப்பில் ஒன்று, விரல்களில் இரண்டல்லது மூன்று, கால்களில் இரண்டு என்று கணக்கற்ற நகைகளைப் போட்டுக் குழந்தைகளை அல்லலுக்கு உள்ளாக்குகின்றனர். அவர்களால் காலில் அணியப்படும் நகைகள் தவிர மற்ற நகைகள் எல்லாம் பொன்னால் ஆனவைகளாகும். சில நகைகளில் நவரத்தினக்கற்கள் வைத்துப் பதிக்கப்பட்டிருக்கின்றன. ஷேக்ஸ்பியர் மகாகவி கூறுவதைப்போல் மேல்நாட்டில் பள்ளிக்கூடத்துக்குப் போகுஞ் சிறுவன் புத்தகப் பையைத் தொங்கவிட்டுக்கொண்டு அதிருப்தியுடன் செல்பவனாயிருக்கிறான். ஆனால் இந்தியச்சிறுவன் அத்துடன் நகைகளையும் தன் உடலில் பூட்டிக்கொண்டு பள்ளிக்கூடத்திற்குச் செல்கிறான். இந்தியநாட்டுப் பண்டைக்கால புராணங்களிலும் காவியங்களிலும் பள்ளிக்கூடப்பிள்ளைகள் உடலில் நகைகளை அணிந்து சென்றார்கள் என்பது கூறப்பட்டுள்ளது.

ஆட்கொல்லிகளாயுள்ள நகைகளின் நிமித்தம் அநேக குழந்தைகள் தங்களுடைய இன்னுயிரைவிட்டிருக்கின்றன.

மைசூர் அரசாங்க ரெஸிடெண்ட் முன்னிலையில் சிசுவைக்கொன்ற வழக்கொன்று சில ஆண்டுகளுக்குமுன் விசாரணைக்கு வந்தது. அப்போது ரெஸிடெண்டானவர், "குற்றவாளியைமாத்திரம் தண்டிப்பதில் பிரயோஜனம் இல்லை; குழந்தைகளின் பெற்றோர்களையும் தண்டிக்கவேண்டும்; ஏனெனில், அவர்கள் குழந்தைகளுக்கு அபரிமிதமான நகைகளைப் போட்டுக் கெட்ட நடவடிக்கையுள்ளவர்களைத் திருட்டுத்தொழிலுக்கும் கொலைக்கும் தூண்டக் காரணமாயிருக்கிறார்கள்" என்று கூறியுள்ளார். அவருடைய கூற்றானது பல்லாற்றானும் பொருத்தமானதாகும். நகைகளின் நிமித்தம் வேலைக்காரர்களும், சொந்த பந்துக்களுங்கூடக் குழந்தைகளைக் கொலை செய்ய ஒருப்படுகின்றனர். இப்போது அம்மை குத்திக்கொள்ளாதவர்கள் பள்ளிக்கூடங்களில் சேர்க்கப்படுவதில்லை என்ற விதி இருந்து வருகிறது. அதே

போல் விலையுயர்ந்த நகைகளை அணிந்துகொண்டுள்ள மாணவ மாணவிகள் பள்ளிக்கூடங்களில் சேர்க்கப்படமாட்டார்கள் என்றவிதி ஏற்படவேண்டுமென்றும், அவ்விதி ஏற்பட்டதினம்தான் நன்னாளாகுமென்றும் நான் நினைக்கிறேன். இத்தகைய சட்டத்தைப் பெரியார் சுலபமாய்ச் செய்யலாம். இதில் மதக் கோட்பாட்டிற்குப் பாதகமான விஷயம் ஏதுவுமில்லை. பணக்காரர்களாகிய பெற்றோர்கள் மாத்திரம் இச்சட்டத்தை ஒருவேளை எதிர்ப்பார்கள். அப்படியானால் அவர்களுடைய பிள்ளைகள் கல்வியில்லாமல் உயிரையாகிலும் வைத்துக்கொண்டிருக்கட்டும். இவ்விஷயம் மிக முக்கியமானதாகையால் குழந்தை பாதுகாப்புச் சங்கத்தாரும், குழந்தைகளுக்கு உதவிபுரியும் சங்கத்தாரும், பெற்றோர்கள் சங்கத்தாரும் இதில் தலையிட்டு உழைக்கவேண்டும். அவர்கள் பள்ளிக்கூட அதிகாரிகளுடனும், கல்வி இலாகா அதிகாரிகளுடனும் கலந்து உழைத்தால் மிகுந்த நன்மையுண்டாகும்.

**குறிப்பு:**—திருவாளர்-ஆர். கிருஷ்ணராவ் பான்ஸ்லே எம். ஆர். ஏ. எஸ் அவர்களுடைய இந் நல்லுரை இக்காலத்துக்கு மிகவும் இன்றியமையாததாயிருக்கிறது. நகைப்பைத்தியங் காரணமாய் எண்ணிறந்த கேடுகள் விளைகின்றன. கன்னெஞ்சர்கள் நகையின் நிமித்தம் பால் மணம் மாறாத குழவிகளையும் கொலைக்கு உள்ளாக்குகிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டும் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு நகைகளைப் பூட்டுவது அறியாமையே தவிர வேறல்ல. பயனற்ற டாம்பீகத்துக்காக அவர்கள் குழந்தைகளைப் பறிகொடுத்துவிடுகிறார்கள். இனியேனும் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளை மேற்கூறப்பட்ட கொலைக்கு ஆளாக்காமல் இருப்பார்களாக. ஸ்ரீமான் கிருஷ்ணராவ் பான்ஸ்லே அவர்கள் கூறுவதைப் போல் வித்தியா இலாகா அதிகாரிகள் ஓர் விதி ஏற்படுத்தினால் அதனால் மிகுந்த நன்மையுண்டாகுமென்றே நாம் அபிப்பிராயப்படுகிறோம். இவ்விதி ஏற்படுவதற்கு, குழந்தை பாதுகாப்புச் சங்கங்களும், பெற்றோர்கள் சங்கங்களும் தக்க முயற்சியெடுத்துக்கொள்ளவேண்டும். ப-ர்.

---

## ஆனந்தபோதினியின் அடிதொழல்.

‘முத்திநெறி’ எனும் மெட்டு.

கற்றவர்கள் வாழுமிந்தக் காருணியத் தாரணியைச்
சுற்றியொவ்வோர் திங்கள்தொறுஞ் சொந்தமதா யுலவிமிக
வெற்றியொடு காந்தியுடன் வேண்டுவ வெல்லாந்தந்து
நற்றுணையே மிகப்புரிந்த நங்காயுன் றாள்பணிந்தேன். (1)

புத்தியைநீ தீட்டிடவே பூவுலகி லேபிறந்தாய்
பத்திநெறி யனைத்துமுன்றன் பாலனுக்குப் பகர்ந்துமிகச்
சுத்தமுறு தென்மொழியைச் சொந்தமுற்றுச் செப்புவித்து
சித்தமதில் வீற்றிருப்பாய் சீர்மிகுந்த என்தாயே! (2)

முனிசாமி வள்ளலவர் வளர்க்குந்திரு மொழியாளே!
கனிவாக என்நாவில் கவித்திறமை தெரித்திடுவாய்
புனிதமிகு மானந்த போதினியே பூதலத்தில்
துனியகற்றிச் சுகமளிப்பாய் துணைமிகுத்தே என்றனுக்கு. (3)

K. S. வீராசாமி செட்டி, தமிழ்ப்பிரியன்.

# இப்போதுள்ள மைசூர் மகாராஜா

# ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையார்

## பகதூர் அவர்கள்.

இம்மன்னர் பெருமான் 1895-ம் வருஷம் பட்டத்துக்கு வந்தார். எனினும் இவர் அப்பொழுது மைனராக இருந்தமையால் இவருடைய அன்னையார் ஸ்ரீ-வாணி விலாச சன்னிதானம் இராஜங்கத்தலைமை வகித்து அரசியலை நடத்திவந்தார். 1902-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 8-ந் தேதி மகாராஜா இராஜ்ஜியாதிகாரத்தை மேற்கொண்டார். நாளிது 1927 - ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 8-ந் தேதியோடு மகாராஜாவின் ஆளுகையின் 25 ஆண்டுகள் பூர்த்திபெற்றன. இந்த 25-வருடகாலத்தில், மகாராஜா அவர்களின் ஆளுகையில் மக்கட்கு ஏற்பட்ட நலங்கள் எண்ணில. "கண்ணம்பாடித்தேக்கம்" என்ற "கிருஷ்ணராஜசாகரம்" மிக்க பொருட்செலவில் கட்டப்பட்டது; பத்ராவதி இரும்புச்சாலை ஸ்தாபிக்கப்பட்டது; தொழிற்சாலைகட்கு உபயோகப்படுமாறு மின்சாரசக்தி மிகுதியாக உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது; மைசூர் ராஜ்ஜியமுழுமையும் ஆரம்பப்படிப்பும், நடுத்தரப்படிப்பும் மக்கட்கு இலவசமாகக் கற்பிக்கப்பட்டு வருகின்றன; உயர்தரப்படிப்புக்கு சர்வகலாசாலையும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சிற்பம், சங்கீதம் முதலியன விசேஷ விருத்தியடைந்திருக்கின்றன; கைத்தொழில், வியாபாரம், விவசாயம் முதலியன செழிப்புற்றிருக்கின்றன; குடிகளின் விவசாயம் முதலியவற்றின் உதவிக்காக ஆயிரக்கணக்கான கிணறுகள், குளங்கள், கால்வாய்கள், ரஸ்தாக்கள் முதலியன அமைக்கப்பட்டிருக்கின்றன; மனிதர்களுக்கும், மிருகங்களுக்கும் வைத்தியசாலைகளும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன; புத்தகசாலைகள் பல அமைக்கப்பட்டுள்ளன. இன்னும் எண்ணற்ற நன்மைகளுண்டு.

மேற்கூறிய மகாராஜா அவர்களின் 25-ம் வருடப்பூர்த்தியின் வெள்ளி ஜூபிளி தினம் மைசூர், பெங்களூர் முதலிய பல இடங்களில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ஜனசமூகத்தின் உபசாரணைப்பத்திரம் மகாராஜா அவர்களுக் களிக்கப்பட்டது. அதற்கவர், "எனது ஆட்சியின் 25-வது ஆண்டு முடிவாகும் தினமாகிய இன்று எனது அன்பு மிக்க ஜனங்களில் ஒவ்வொருவருக்கும், அவர்கள் சுகமாக வாழவேண்டுமென்ற என் வாழ்த்தை அனுப்புகிறேன்; விடாமுயற்சியுடன் உயிருள்ளளவும் நான் அவர்களுடைய நலத்தை விருத்தியாக்க முயற்சிசெய்வேன். எனது வாழ்க்கையிலும் ஆட்சியிலும் என் உன்னத நோக்கமாகிய இக்காரியத்தை நிறைவேற்றப் போதுமான அறிவும் ஆற்றலும் எனக்களிக்குமாறு நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்" என்று உறுதிமொழிகள் கூறினர். ஆங்காங்குப் பற்பல அற்புத வேடிக்கைகள் நடந்தன. ஆலயங்களில் விழாக்கள் நடந்தன. கைதிகள் பலர் சிறை நீக்கப்பட்டனர். 60-லட்சம் ஜனங்கள் "மகாராஜா பல்லாண்டு வாழ்க" என்று வாழ்த்தினர். நம்தேயப் பண்டைக்கால மன்னர்களைப்போலத் தம் கடமையை உணர்ந்து அரசாளுவதில் இவரே சிறந்தார். இவர் நீடூழி வாழ்க.




# கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்

(45-ம் பக்கத் தொடர்ச்சி.)

உலகநாதர்:—" உமக்கு மிக்க வந்தனம். நான் உடனே யவரிடம் செல்கிறேன்" என்றார்.

* * * * * * *

நவீனபுரியில் உயர்குலப்பிரபுக்கள் வசிக்கும்பாகத்தில் ஒரு சிறுவீதியில் உள்ள ஒரு வீட்டில் கிருஷ்ணலிங் வசித்துக்கொண்டிருக்கிறான். அது நான்கடுக்கு மாளிகை; பழையமாதிரி வீடு. அது இருப்பது பத்தாவது நம்பர் வீதி. அவன் மூன்றாவது நான்காவது அடுக்குமாளிகைகளைத் தனக்கு வைத்துக்கொண்டு மீதியிடத்தைத் தகுந்தவர்களுக்கு வாடகைக்கு விட்டிருந்தான்.

போலீஸ் இன்ஸ்பெக்டரும் உலகநாதரும் சம்பாஷித்துக்கொண்டிருக்கும் அதேசமயத்தில், கிருஷ்ணலிங் தன் அறையில் நிம்மதியாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறான்.

அவன் வயது முதிர்ந்தவனாயினும் தீட்சணியமான பார்வையுடையவன். அவன் பார்வை முழுதும் மிக்க ஆவலோடும் அக்கரையோடும் அடுத்த அறையிலிருந்த ஒரு வாலிபனுடைய செய்கைமேல் இருந்தது. அவன் அடிக்கடி அந்த வாசற்படியினருகில் சென்று ஆவலுடன் அங்கு நடக்கும் விஷயத்தைக் கவனித்துக்கொண்டிருந்தான். அவன் பார்க்கும் அழகிய உருவத்தைக்காண எவனாயிருந்தாலும் பிரியப்படுவான்.

அந்த அறையில் இருக்கும் வாலிபனுடைய தேக அமைப்பு மிக்க அபூர்வமானதே. அவனுடைய கட்டுவிடாத தேக அவயவங்கள் அளவுமீறிப் பருத்திருக்கவில்லை. ஆனால் ஒரு இராக்ஷதன்கூட அவனுடைய கையிற்சிக்கினால் இரும்பு இயந்திரத்தில் சிக்கிக்கொண்டமாதிரியே. அவன், கிருஷ்ணலிங்கின் புதல்வனாகிய ஆனந்தலிங்கே. கிருஷ்ணலிங் தன் ஏகபுத்திரனாகிய ஆனந்தலிங்கின் தேகவல்லமையைப்பற்றி மிக்க அக்கரையும் சிரத்தையு மெடுத்துக் கொண்டான்.

துப்பறிவதில் பிரக்கியாதியடைந்த கிருஷ்ணலிங் தன் புத்திரனுடைய மனதில் துப்பறியும் அறிவையும் தந்திரசாமர்த்தியங்களையும் பூரணமாய் நிரப்பியிருந்தான். தன் புத்திரனை அற்புதமான துப்பறிபவனாய்ப் பயிற்சி செய்துவிட்டான். ஆனந்தலிங்குக்கு அப்போது இருபத்துநான்கு வயதாகியிருந்தது. அவன் அந்த அறையின் ஒருபக்கத்தில் கட்டித்தொங்கவிடப்பட்டிருக்கும் மணற்பைமேல் (குத்துச்சண்டைக்காக அணியும் கையுறைகள் அணியப்பட்ட) முஷ்டிபிடித்த கரங்களால் குத்திக்கொண்டிருக்கிறான்.

பத்து நிமிடங்கள் கழித்துத் திடீலென்று அறையிலிருக்கும் டெலிபோன் மணியடித்தது. கிருஷ்ணலிங் உடனே சென்று தன்னைக் கூப்பிடுகிறவர்களோடு பேசிவிட்டுத் திரும்பினான். ஆனந்தலிங் "தந்தையே! என்ன சங்கதி?" என்று வினவினான்.

**தந்தை:**—"நமது இன்ஸ்பெக்டர் ஒரு கேஸை யனுப்புகிறார். முதலில் இதை யுனக்கு முதல் கேஸாகக் கொடுக்கலாமென்று நினைத்தேன். ஆனால் மிகச் சாதாரணமும் சுலபமுமான கேஸ். மிக்க செல்வவந்தரான பாங்கிக்காரராகிய உலகநாதம் பிள்ளையின் புத்திரி காணாமற் போய்விட்டாளாம்" என்றான்.

பத்து நிமிடங்களுக்குப்பின் ஒரு வண்டிவந்து வீதியில் நின்றதும் கதவு தட்டப்பட்டது. கிருஷ்ணஸிங் உடனே எழுந்து தன் புத்திரனிருக்கும் அறையை மூடிவிட்டுத் தன் அறையின் கதவைத்திறந்தான். உலகநாதம் பிள்ளை 'நீர்தாம் கிருஷ்ணஸிங் என்று நினைக்கிறேன்" என்று கூறிக் கொண்டே அறைக்குள் வந்தார்.

**கிருஷ்:**—ஆம். தாங்கள் உலகநாதம்பிள்ளை.

உலகநாதம்பிள்ளை சற்று வியப்போடு "ஆ! நானென்று தெரியுமோ? நான்வந்த வேலைகூடத் தெரியுமோ?" என்றார்.

**கிருஷ்:**—விவரமாய்த் தெரியாது. தாங்கள்தான் கூறவேண்டும்.

உலகநாதம்பிள்ளை நாற்புறங்களிலும் சுற்றிப்பார்த்தார். கிருஷ்ணஸிங் "நாம் தனியேதானிருக்கிறோம். அக்கதவு மூடப்பட்டிருக்கிறது. அங்கு யாருமில்லை" என்றான்.

**உலக:**—இன்ஸ்பெக்டர் ன்னை யும்மிடம் அனுப்பினார். தாங்கள் ஒரு கேஸிலும் தோல்வியடைந்ததில்லையென்று கூறினார். நீர் எனக்கு உதவி செய்கிறீரா?

**கிருஷ்:**—அவர் கூறியது உண்மையே. ஏனெனில் என் மனதிற்கு ஜெயிப்போம் என்று நிச்சயமாய்த் தோன்றாத கேஸை நான் எடுத்துக் கொள்வதில்லை. தாங்கள் இன்னும் தங்கள் விஷயத்தைக் கூறவில்லை. அதைக்கேட்ட பின்பு நான் விடையளிப்பேன். ஆனால் பெரும்பாலும் ஒப்புக்கொள்ளமாட்டேனென்றே நினைத்திரும்.

உலகநாதம்பிள்ளைக்கு ஒரு காரணமும் விளங்காமலே இன்ஸ்பெக்டர் கூறியபடியே கிருஷ்ணஸிங் விஷயத்தில் பூரணநம்பிக்கை யுண்டாய்விட்டது. ஆகையால் அவன் முகங்கொடுத்து நம்பிக்கையோடு பேசாவிட்டாலும், 'எப்படியேனும் இவனையே நாம் அமர்த்திக்கொள்ளவேண்டும்' என்று தமக்குள் தீர்மானம் செய்துகொண்டு, இன்ஸ்பெக்டரிடம் கூறியது போலவே நடந்த விவகாரத்தைக் கூறினார்.

கிருஷ்ணஸிங் இன்ஸ்பெக்டர் கேட்டமாதிரி கேள்விகளையே கேட்டு முடிந்தபின் சுமார் பத்து நிமிடங்கள் வரையில் சிந்தனையிலிருந்தான்.

இந்தக் கேஸில் பிரவேசித்தால் நல்ல பணம் கிடைக்குமென்று தெரியும். ஆனால் அவனுக்குப் பணம் அவசியமல்ல. உலகநாதப்பிள்ளையின் துயரத்திற்காகத் தனக்கு மிக்க இரக்கம் உண்டாயிற்று. ஆயினும் கேஸ் மிக்க தந்திரசாமர்த்தியங்களைக் காட்டவேண்டிய கடினமான கேஸாயிருந்தால் ஒப்பிக்கொள்ளலாம், அப்படிக்கில்லை. மிகச் சுலபமானது. சாதாரணமாய் இதைக் கண்டுபிடிக்கக்கூடிய ஆசாமிகள் ஐம்பதுபேருக்குமேல் கிடைப்பார்கள். ஆகையால் இக்கேஸ் நமக்கு வேண்டாமென்று மறுதலித்து விடுவதே சரி எனத் தனக்குள் தீர்மானித்துக்கொண்டு உலகநாதம்பிள்ளையிடம் கூறிவிடவெண்ணித் தலைநிமிர்ந்து உட்கார்ந்தான்.

(தொடரும்) ஆரணி. குப்புசாமி முதலியார்.

---



# வர்த்தமானப்பகுதி

அற்புத சமாதி :—ஸ்ரீவில்லிபுத்தூர் திருவாத்தித் தெருவில், கௌரவம் பொருந்திய ஓர் குடும்பத்தில் உதித்த டி. சுப்பிரமணிய பிள்ளை யென்ற பெரியாரொருவர் இருந்தாரென்றும், அவர், சதா சத்சங்க காலக்ஷேபமும், வேதாந்த விசாரணையும் செய்து யோகசித்தி பெற்றிருந்தாரென்றும், தென் காசித் தாலூகா, குலையனேரிக் கிராமத்தில் ஆனிமீ 13வ திங்கட்கிழமை மாலை 4-மணிக்கு அவர் சாதாரணமாகப் பேசிக்கொண்டிருக்கும்போது, "இனிக் கவலையில்லை; சந்தோஷம்" என்று சொல்லிப் பத்மாசனத்தமர்ந்த படி அடங்கிவிட்டாரென்றும், 1-மணி நேரம் சென்றபின் பெரியோர்கள் அவரைப் பரீக்ஷித்துப் பார்த்ததில் சரீரம் குளிர்ந்தும், சுவாச நாடிகள் ஒய்ந்தும், இருந்ததாகவும், ஆனால் தலையில்மட்டும் சிறிது சூடிருந்ததென்றும், சரீரத்தில் வேறு எவ்வித மாறுதலு மில்லையென்றும், முகம் தேஜசுடனிருந்த தென்றும், கைகால்களின் விரல்கள் நீட்டவும் முடக்கவும் அமைந்திருந்தன வென்றும், இவ்வித நிலைமைகளுடன் அவருடம்பு 24-மணி நேரம்வரை யிருந்தும் அதில் எவ்வித அசூயையுமுண்டாகவில்லை யென்றும், இவ்வற்புதத்தைப் பார்க்க எண்ணிறந்த ஜனங்கள் கூடினார்களென்றும், பின்னர் அப்பெரியார் தேகம் சமாதியி லடக்கப்பட்டதென்றும், ஆடிமீ 22வ அப்பெரியார்க்கு மண்டல பூசை நடைபெற்றதென்றும் நம்போதினி சந்தாதார் மு சோம சுந்தரம் என்பவர் தெரிவிக்கிறார். (இவ்வர்த்தமானம் நம்நாட்டுப் பெரியாரின் யோகசித்தியின் உண்மை உயர்வை விளக்கக்கூடியது.)

ஆகாய மூலிகை :—மதுரை ஜில்லா, மேலூர்த் தாலூகா, சொக்கம்பட்டிக் கிராமத்தில் உள்ளார் நூதனமாக ஒரு செடி கண்டுபிடித்திருப்பதாகவும், அதனுடைய ஒரு இலையைக்கிள்ளி அதன் காம்பில் ஒரு சிறு நூலைக்கட்டி அதனை நிழலுள்ள விடத்தில் அந்தரமாகத் தொங்கவிட்டால், அந்த இலையின் சுற்றுப் பக்கங்களில் உள்ள வரிகளில் சிறு கிளைகள் உற்பத்தியாகித் தளிர்க்கின்றனவென்றும், இதன் பெயர் ஆகாய மூலிகை யென்று பெரியோர்களால் சொல்லப்படுகிறதென்றும் நமது சந்தாதாரர் A. R. M. உடையப்ப செட்டியார் தெரிவிக்கிறார்.

மோட்டார் வீடு :—பிரான்சு தேசத்தில் பாரிஸ் நகரைச் சேர்ந்த இரண்டு கொத்தர்கள் ஓர் அதிசயமான வீடு கட்டியிருக்கிறார்கள். இந்த வீட்டை அதன் சொந்தக்காரன் வேண்டும்போது கரகரவென்று சுற்றச் செய்யலாம். அல்லது அதி வேகமாகச் செல்லக்கூடிய மோட்டாரைப் போல் செலுத்திக்கொண்டு போகலாம். பகல் பன்னிரண்டு மணி நேரமும் இந்த வீட்டின் சொந்தக்காரன் வெயில் காய விரும்பினால் அவன் வீட்டின் கிழக்கு முகப்பில் வெயில்படுமிடத்தில் காலையில் உட்கார்ந்துகொண்டு தான் இருந்த விடத்தைவிட்டு எழுந்திராமலே, வெயில்மட்டும் தன்மீது படும்படி வீட்டைச் சுற்றிக்கொண்டே யிருக்கலாம். குழந்தைகளுக்கு விளையாட்டுக் காட்டுவதற்காக மணிக்கு 100-மைல் வேகத்தில் வீடு சுழலும்படி செய்யலாம். ஆனால் சாமான்களும், மனிதர்களும் அப்போது வெகுஜாக்கிரதையா யிருக்கவேண்டும். இந்த மோட்டார் வீட்டைக்கட்ட 10,000 பவுன் செலவாயிற்றாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரபவ௵ புரட்டாசி௴—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,**
**பசலி 1337—கொல்லமாண்டு 1103—ஹிஜரி 1346,**
**இங்கிலீஷ் 1927௵ செப்டம்பர்௴—அக்டோபர்௴**

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | சனி | சப்39-3 | ரோ31-25 | அ31-25சி | ஷடசீதி புண்யகாலம், மஹாலக்ஷ்மி விரதம் |
| 2 | 18 | ஞா | அஷ்36-28 | மிரு30-25 | சித்60 | கெஜகௌரி விரதம் |
| 3 | 19 | திங் | நவ35-30 | திரு31-8 | சி13-8அ | ஹரிசங்கரயோகா |
| 4 | 20 | செ | தச35-58 | புன33-3 | சித்60 | தானியம் செலவிட [தசி |
| 5 | 21 | புத | ஏகா37-45 | பூசம்36-23 | சித்60 | அவமாகம், சர்வமத்வ ஏகா |
| 6 | 22 | வியா | து40-33 | ஆயி40-43 | சி40-43அ | நவக்கிரக சாந்திசெய்ய |
| 7 | 23 | வெ | திர44-23 | மக45-55 | ம45-55சி | பிரதோஷம் [விரதம் |
| 8 | 24 | சனி | சது48-58 | பூர51-55 | சி51-55ம | மாசசிவராத்திரி, கேதார |
| 9 | 25 | ஞா | 54-10 | உத்58-30 | அமி60 | சர்வ, பிதுரு, மாளய அமாவாசை |
| 10 | 26 | திங் | பிர59-55 | அஸ்60 | சித்60 | நவராத்திரி ஆரம்பம் |
| 11 | 27 | செவ் | துதி60 | அஸ்5-40 | சித்60 | சந்திரதெரிசனம் |
| 12 | 28 | புத. | துதி6-10 | சித்13-13 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 13 | 29 | வியா | திரி12-40 | சுவா20-55 | அ20-55சி | மாசசதுர்த்திவிரதம் [தம் |
| 14 | 30 | வெ | சது18-55 | விசா28-28 | சித்60 | உபாங்கலலித கௌரி விர |
| 15 | 1 | சனி | பஞ்24-45 | அனு35-23 | சித்60 | சஷ்டி, பிரயாணம் செய்ய |
| 16 | 2 | ஞா | சஷ்29-28 | கேட்41-13 | ம41-13அ | கரிநாள் |
| 17 | 3 | திங் | சப்32-45 | மூல45-35 | சி45-35ம | சரஸ்வதி ஆவாகனம் |
| 18 | 4 | செவ் | அஷ்34-3 | பூரா48-5 | சி48-5அ | சரஸ்வதி பூஜை, ஆயுத பூஜை |
| 19 | 5 அக்டோபர் | புத | நவ33-20 | உத்-48-28 | அ48-28சி | |
| 20 | 6 | வியா | தச30-33 | திரு46-45 | சித்60 | |
| 21 | 7 | வெ | ஏகா25-30 | அவி43-5 | சித்60 | |
| 22 | 8 | சனி | து18-43 | சத37-43 | அ37-43ம | |
| 23 | 9 | ஞா | திர10-30 | பூரட்31-8 | சி31-8அ | |
| 24 | 10 | திங் | சது1-23 ○51-48 | உத்23-35 | சித்60 | |
| 25 | 11 | செவ் | பிர42-5 | ரேவ15-25 | சித்60 | |
| 26 | 12 | புத | துதி32-40 | அஸ்8-8 பர※1-8 | ம8-8சி | |
| 27 | 13 | வியா | திரி24-10 | கிரு55-15 | சி1-8ம | கிருத்திகை, அவமாகம் |
| 28 | 14 | வெ | சது17-3 | ரோ50-45 | ம50-45சி | நாகசதுர்த்தி |
| 29 | 15 | சனி | பஞ்11-23 | மிரு48-5 | சித்60 | கரிநாள், ஆபரணம் பூண |
| 30 | 16 | ஞா | சஷ்7-30 | திரு47-8 | சித்60 | கதிரறுக்க, வியாதியஸ்தர் குளிக்க |

| | | | |
|---|---|---|---|
| குரு | | | ராகு |
| | 11உ ரிஷ-ரா<br>,, விரு-கே<br>12,, து-புத<br>29,, து-செவ் | | சுக் |
| கே | சனி | | சூ-பு செவ் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.